# 54. புதிய கருத்துக்கள்

## 54:1

**குடுமியான்மலை தமிழ்–பிராமிக் கல்வெட்டில் ஒரு திருத்தம் :**

ஆவணம் இதழ் 10ல் குடுமியான்மலை தமிழ் பிராமிக் கல்வெட்டு **நாழன் கொறறந்தய ப.ய** என்று உள்ளதாக வெளிவந்துள்ளது. அதன் பதினோராம் எழுத்து முற்றிலும் அழிந்துபோய் அங்கு இப்பொழுது ஒரு வெற்றிடம் தான் உள்ளது என அதன் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அக்கல்வெட்டினை நேரில் சென்று பார்க்கும் போது அந்த பதினோராம் எழுத்து அழியவில்லை. அங்கு 'ரி' என்னும் எழுத்து உள்ளது தெளிவாய்த் தெரிகிறது. எனவே அதனை **நாழன் கொற்றந்தய பரிய** என்று படிப்பதே சரியாகும். பரியங்கம், பரியல்திகை, பரியயம் ஆகிய சொற்களும் படுக்கையினையே குறிப்பதால் ஞாழல் என்ற ஊரைச் சேர்ந்த கொற்றந்தை என்பான் அமைந்த படுக்கை என்றே பொருள் கொள்ளலாம்.

**– செ. கோவிந்தராஜ், உதகை.**

---



## கட்டுரையாளர்கள்

**திரு. ஆறுமுக சீதாராமன்,**
12, ராஜராஜன் நகர்,
மானோஜிபட்டி (தெற்கு)
தஞ்சாவூர்

**முனைவர் சு. இராசகோபால்,**
கல்வெட்டாய்வாளர்,
தொல்லியல்துறை,
சி.பி.டி. வளாகம்,
சென்னை – 113.

**திரு. கரு. இராசேந்திரன்,**
ஆசிரியர்,
மேலப்பனையூர் அ.நி.,
விராச்சிலை வழி – 622 420

**திரு. க. ஈஸ்வரன்,**
தொல்லியல் துறை,
சி.பி.டி. வளாகம்,
தரமணி, சென்னை – 113.

**திரு. கோ. உத்திராடம்,**
அன்னம்பாக்கம்

**திரு. ஐராவதம் மகாதேவன்,**
இ.அ.ப. (ஓய்வு)
வித்யா ஸ்ரீ
18, ஏ, 4வது கடற்கரை நோக்குச் சாலை,
வால்மீகி நகர்,
திருவான்மியூர்,
சென்னை – 600 041.

**திரு. நாக. கணேசன்,**
காப்பாட்சியர்,
தொல்லியல்துறை அகழ்வைப்பகம்,
ஜவஹர்பஜார்,
கரூர் – 639 001.

**திரு. மா. கலைவாணன்,**
காப்பாட்சியர்,
தொல்லியல்துறை அகழ்வைப்பகம்,
1, முகமது அலி கிளப் சாலை,
தருமபுரி.

**திரு. நடன. காசிநாதன்**
136, 5வது தெரு, மல்லீஸ்வரிநகர்,
சேலையூர், சென்னை – 600 073.

**திரு. ம. காந்தி,**
காப்பாட்சியர்,
அரசு அருங்காட்சியகம், கோட்டை,
வேலூர்.

**திரு. ம. காந்திராசன்**
சென்னை

**திரு. ஆனந்தபுரம். கோ கிருஷ்ணமூர்த்தி,**
ஆனந்தபுரம்

**திரு. கி. குமார்**
சென்னை

**திரு. தே. கோபாலன்,**
தொல்லியல் அலுவலர்,
மாவட்ட ஆட்சியார் அலுவலக வளாகம்,
நாகர் கோயில்.

**திரு. செ. கோவிந்தராஜ்,**
காப்பாட்சியர்,
அரசு அருங்காட்சியகம்,
பாலி இல்லம், மைசூர் சாலை,
உதகமண்டலம் – 643 001.

**கி.இரா. சங்கரன்,**
ஆய்வாளர், கல்வெட்டியல் துறை,
தமிழ்ப்பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் – 613 005.

**திரு. சங்கரன் இராமன்,**
D1–8, ஆனந்தா குடியிருப்பு,
திருவான்மியூர்,
சென்னை – 600 041.

**முனைவர் ப. சண்முகம்,**
பேராசிரியர்,
தொல் வரலாறு, தொல்லியல்துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை – 600 005.

**முனைவர் த. சந்திரகுமார்**
பேராசிரியர்,
சிற்பத் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**திரு. அ. சந்திரபோஸ்**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**திரு. சொ. சந்திரவாணன்,**
காப்பாட்சியர்,
தொல்லியல்துறை அகழ்
வைப்பகம், சன்னதி தெரு,
குற்றாலம்.

**திரு. சொ. சாந்தலிங்கம்**
தொல்லியல் அலுவலர்
திருமலை நாயக்கர் அரண்மனை,
மதுரை - 625 001.

**முனைவர் சு. சுவாமிநாதன்,**
உதவி கல்வெட்டியல்
கண்காணிப்பாளர்,
இயக்குநர் (கல்வெட்டியல்)
அலுவலகம், இந்தியத் தொல்லியல்
அளவீட்டுத்துறை,
மைசூர் - 570 005.

**வி. செல்வக்குமார்,**
ஆய்வாளர்,
தொல்லியல் துறை,
தெக்கணக் கல்லூரி,
புணெ - 410 006.

**முனைவர் கு.சேதுராமன்,**
பேராசிரியர்,
கலை வரலாற்றுத்துறை,
மதுரை காமராஜர் பல்கலைக்
கழகம், மதுரை - 625 021.

**திரு. இரா. தனபால்,**
காஞ்சிபுரம்.

**திரு. இல. தியாகராஜன்,**
பேராசிரியர்,
வரலாற்றுத்துறை,
அரசுகலைக் கல்லூரி,
அரியலூர் - 621 704.

**திரு. து. துளசிராமன்,**
காப்பாட்சியர்,
தொல்லியல் துறை
அகழ்வைப்பகம்,
ஆர்க்காடு - 632 503.

**திரு. எம். நம்பிராசன்**
சென்னை.

**திரு. இரா. நாகேஸ்வரசிவம்,**
சிவன் கோயில் குருக்கள்,
இருகூர், கோவை மாவட்டம்.

**முனைவர் ஆ. பத்மாவதி,**
கல்வெட்டாய்வாளர்,
தொல்லியல் துறை,
சி.பி.டி. வளாகம்,
சென்னை - 113.

**செல்வி மா. பவாணி,**
ஆய்வாளர்,
கல்வெட்டியல், தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**புலவர் அ. பழனியப்பன்,**
95, பழனியாண்டவர் கோயில் தெரு,
சம்பை - 638 312.

**திரு. க. பன்னீர்செல்வம்,**
உதவி கல்வெட்டாய்வாளர்,
இயக்குநர் (கல்வெட்டியல்)
அலுவலகம், இந்தியத் தொல்லியல்
அளவீட்டுத் துறை,
மைசூர் - 570 005.

**திரு. ஆர். பாலச்சந்திரன்,**
திருத்தங்கல்,
விருதுநகர் மாவட்டம்.



**திரு. க.அ. புவனேசுவரி,**
முதுநிலை தமிழாசிரியை,
கே.ஜி. பெண்கள் மேல்
நிலைப்பள்ளி, அன்னூர் - 641 653.

**திரு. ப. புஷ்பரட்ணம்,**
ஆய்வாளர், கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**திரு. ர. பூங்குன்றன்,**
காப்பாட்சியர், தொல்லியல் துறை,
கோயமுத்தூர் - 641 012.

**திரு. ப. பூபாலன்,**
9, பாட்டைத் தெரு,
நவல்பூர்,
இராணிப்பேட்டை - 632 402.

**செல்வி ந. முத்து,**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 615 005

**Dr. M.R. Ragava Varier,**
Professor, (Retd.)
Department of History,
Calicut University, Kozikodu.

**முனைவர் க. ராஜன்,**
இணைப் பேராசிரியர்,
கல்வெட்டியல், தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**திரு. மு. ராஜேஷ்,**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**திருமதி சீ. வசந்தி,**
அகழாய்வாளர், தொல்லியல் துறை,
சி.பி.டி. வளாகம்,
சென்னை - 113.

**முனைவர் நா. வள்ளி,**
பேராசிரியை,
இராமசாமி தமிழ்க்கல்லூரி,
காரைக்குடி.

**முனைவர் வெ. வேதாசலம்,**
கல்வெட்டாய்வாளர்.
திருமலை நாயக்கர் அரண்மனை,
மதுரை - 625 001.

**திரு. சி. வீரராகவன்,**
66, முத்துவேல் லே அவுட்,
கே.கே. சாலை,
விழுப்புரம் - 605 606.

**திரு. ப. வெங்கடேசன்,**
3/178, கம்பன் தெரு,
பெல்லியப்பா நகர்,
வாலாஜாப் பேட்டை - 632 513.

**திரு. பா. ஜெயக்குமார்,**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

**திரு. இர. ஜெயராமன்,**
இளநிலைக் கல்வெட்டாய்வாளர்,
தொல்லியல் துறை,
தஞ்சாவூர்.

**திரு. கி. ஸ்ரீதரன்,**
9ஏ, மேல் அடையவிளஞ்சான் வீதி,
திருவரங்கம்,
திருச்சிராப்பள்ளி.

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY,
### THANJAVUR

**Receipts and Payments Account for the year ended 31.3.2000**

| | | | |
|---|---|---|---|
| To Opening Balance | | By Bank FD | 1,20,000.00 |
| " Cash in Hand | 603.34 | " Printing | 18,070.00 |
| " Cash at Bank Indian Bank Thanjavur | 696.00 | " Typing Charges | 1,766.75 |
| " SBI, Thanjavur | 9,379.41 | " Audit Fees | 450.00 |
| " Bank FD | 1,30,000.00 | " Salary | 450.00 |
| " Sale of Books | 8,010.00 | " Honorarium | 2,000.00 |
| " Membership Fees | 11,670.00 | " Postage | 1,919.00 |
| " Interest | 9,367.41 | " Bank Charges | 277.00 |
| | | " Freight | 194.00 |
| | | " General Expenses | 1,364.00 |
| | | " Closing Balance Cash at Bank SBI, TNJ | 22,097.82 |
| | | IB, TNJ | 728.00 |
| | | " Cash in hand | 409.59 |
| | 1,69,726.16 | | 1,69,726.16 |

(Sd.) **V. Ramasamy,** B.Com., ACA
Chartered Accountant
No. 1137, East Main Street,
Thanjavur



## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY,
### THANJAVUR

**Income and Expenditure for the year ended 31.3.2000**

| Expenditure | | Income | |
|---|---|---|---|
| To Printing Charges | 18,070.00 | By Sales of Books | 8,010.00 |
| " Typing & Stationery | 1,766.75 | " Membership Fees | 11,670.00 |
| " Audit Fees | 450.00 | " Interest | 9,367.41 |
| " Salary | 450.00 | | |
| " Honorarium to T.N. Subramanian Endowment Lecture | 2,000.00 | | |
| " To Postage | 1,919.00 | | |
| " Bank Charges | 277.00 | | |
| " Transport (Freight) | 194.00 | | |
| " General Expenses | 1,364.00 | | |
| " Excess of Income Over Expenditure | 2,556.66 | | |
| | 29,047.41 | | 29,047.41 |

Balance Sheet as 31.3.2000

| Liabilities | | Assests | |
|---|---|---|---|
| Opening Balance | 1,40,678.75 | Fixed Deposit | 1,20,000.00 |
| Add : Excess of | | Cash at Bank | |
| Income Over | | Indian Bank TNJ | 728.00 |
| Expenditure | 2,556.66 | SBI Thanjavur | 22,097.82 |
| | | Cash in Hand | 409.59 |
| | 1,43,235.41 | | 1,43,235.41 |

(Sd.) **V. Ramasamy,** B.Com., ACA
Chartered Accountant
No. 1137, East Main Street,
Thanjavur

அ. இராசவேலு

# ஆவணம்

இதழ் 11 சூலை 2000



**தமிழகத் தொல்லியல் கழகம்**

தஞ்சாவூர்



தஞ்சாவூர்

# ஆவணம்

இதழ் 5 தூலை 1994



# AVANAM

JOURNAL OF TAMIL NADU

ARCHAEOLOGICAL SOCIETY

# ஆவணம்

இதழ் 5 AVANAM 5 சூலை 1994

## பொருளடக்கம்



தமிழகத் தொல்லியல் கழகம்

## பதிப்புக் குறிப்பு

தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆவணம் இதழ்–5 உரிய நேரத்தில் வெளிவருகிறது. புதுதில்லியில் உள்ள இந்திய வரலாற்று ஆய்வுக் கழகம் (ICHR) நம் ஆவணம் இதழின் தரத்தையும், அது தாங்கி நிற்கும் வரலாற்றுச் சான்றுகளையும் உற்று நோக்கி இனி வருங்காலங்களில் இதழை வெளியிட நல்கை அளித்திட முடிவு செய்துள்ளது. இது கழக உறுப்பினர்கள் அனைவரும் பெருமைப்பட வேண்டிய செய்தியாகும். கட்டுரைகளைக் காலந்தாழ்த்தாது ஆவணம் கொண்டுள்ள நடைச்சீர்மையைக் கடைப்பிடித்து தட்டச்சு செய்து விரைந்து அனுப்பும்படி மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். அண்மைக் கால வெளியீடுகள், திறனாய்வுகள், மதிப்புரைகள், வரலாற்றுச் செய்திகள் அனுப்பினால் அது ஆவணத்தின் தகுதியை மேலும் கூட்ட உதவும்.

வழக்கம்போல் இந்த இதழ் அச்சேற்று வேலையிலும் பெரும் பொறுப்பை புலவர் செ.இராசு, முனைவர் கா. இராஜன் ஆகியோர் ஏற்றனர் என்பதை நன்றியுடன் பதிவு செய்யவேண்டும். இதழை அழகாகவும் விரைவாகவும் அச்சிட்டளித்த புதுக்கோட்டை சா்மா'ஸ் சானடோரியம் அச்சகத்தாருக்கும் நன்றி.

தஞ்சாவூர் எ.சுப்பராயலு
25.7.1994

## நன்றி

ஆவணம் இதழில் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை முதலிய பல நிறுவனங்களைச் சேர்ந்த அலுவலர் வெளியிடும் புதிய கண்டுபிடிப்புகள் மீதான பதிப்புரிமை அவ்வவ் நிறுவனங்களையே சாரும்; அவற்றை வெளியிட இசைவளித்த நிறுவனங்கள் யாவற்றுக்கு நன்றி.

## கிரந்த எழுத்துக்களும் அவற்றிற்கு நிகரான தமிழ் எழுத்துக்களும்

| | | |
|---|---|---|
| அ | a | 𑌅 |
| ஆ | ā | 𑌆 |
| இ | i | 𑌇 |
| ஈ | ī | 𑌈 |
| உ | u | 𑌉 |
| ஊ | ū | 𑌊 |
| எ | e | |
| ஏ | ē | 𑌏 |
| ஐ | ai | 𑌐 |
| ஒ | o | |
| ஓ | ō | 𑌓 |
| ஔ | au | 𑌔 |
| ரு0 | ṛ / ṛi | 𑌋 |
| ளு0 | ḷ | 𑌌 |

| | | |
|---|---|---|
| க | k | 𑌕 |
| க2 | kh | 𑌖 |
| க3 | g | 𑌗 |
| க4 | gh | 𑌘 |
| ங | ṅ | 𑌙 |
| ச | c | 𑌚 |
| ச2 | ch | 𑌛 |
| | j | 𑌜 |
| ச4 | jh | 𑌝 |
| ஞ | ñ | 𑌞 |
| ட | ṭ | 𑌟 |
| ட2 | ṭh | 𑌠 |
| ட3 | ḍ | 𑌡 |
| ட4 | ḍh | 𑌢 |
| ண | ṇ | 𑌣 |
| த | t | 𑌤 |
| த2 | th | 𑌥 |
| த3 | d | 𑌦 |
| த4 | dh | 𑌧 |
| ந | n | 𑌨 |

| | | |
|---|---|---|
| ப | p | 𑌪 |
| ப2 | ph | 𑌫 |
| ப3 | b | 𑌬 |
| ப4 | bh | 𑌭 |
| ம | m | 𑌮 |
| ய | y | 𑌯 |
| ர | r | 𑌰 |
| ல | l | 𑌲 |
| வ | v | 𑌵 |
| ழ | ḻ | |
| ள | ḷ | 𑌳 |
| ற | ṟ | |
| ன | ṉ | |
| ச0 | ś | 𑌶 |
| | ṣ / sh | 𑌷 |
| | s | 𑌸 |
| | h | 𑌹 |

2,3,4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்து தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

# 1. மூன்றாம் நந்திவர்ம பல்லவனின் இளையநல்லூர்க் கல்வெட்டு

கே. குமார், சென்னை

**இடம் :** வடஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டம் வாலாஜாப் பேட்டைக்கு சுமார் 15 கிலோ மீட்டர் மேற்கில் அமைந்துள்ளது இளையநல்லூர். இங்குள்ள பிள்ளையார் கோயிலின் அருகே சாலையில் அமைக்கப்பட்டுள்ள கல்மேடையின் மேற்பகுதியில் கல்வெட்டுள்ளது.

**காலம் :** மூன்றாம் நந்திவர்மன், இருபத்திரண்டாவது ஆட்சியாண்டு கி.பி. 868ல்

**செய்தி :** சகளமனும்பாடி பகுதியை மூன்றாம் நந்திவர்மனின் கீழ் ஆட்சிபுரிந்த சிற்றரசன் வரும்ம விண்ணிக்கிடியார் என்பவர் தன்னுடைய படையைப் பராமரிப்பதற்காக இளையனூரில் உள்ள மும்மூலைப்பட்டி என்னும் நிலப்பகுதியை இறைஇலியாக வழங்கியதைக் கூறுகிறது. இளையனூர் இன்றைய இளைய நல்லூரே ஆகும். இவ்வூர் பல்லவர் ஆட்சிப் பகுதியின் ஒரு உட்பிரிவாக இளையனூர் நாடு எனவும் அந்த நாட்டின் தலைமை யிடமாகவும் விளங்கியிருந்தமையை இம்மன்னனின் கி.பி. 863 ஆம் ஆண்டு திருவல் கல்வெட்டுக் கூறுகிறது. விண்ணிக்கிடியார் பற்றி பிற கல்வெட்டு களில் எவ்விதக் குறிப்பும் காணப்படவில்லை.

*1 கோவிசைய நந்திவி*
*2 க்கிரம பருமற்கு யா*
*3 ண்டு இருபத்திரண்*
*4 டாவது சகள மனு*
*5 ம்பாடியும் இ(வ)ரு*
*6 வரும்ம விண்ணி*
*7 க்கிடியார் தன்சே*
*8 னைக்கு இறை இல்லி*
*9 இளையனூர் மும்*
*10 மூலைப்பட்டி தண்*
*11 ணீர்க்கும் தீக்கும் வை*
*12 த்தது இது காத்தா*
*13 னடி என்றலை*
*14 மேலன*

# 2. பல்லவ நிருபதுங்கவர்மனின் குமாரவாடிக் கல்வெட்டு

ஜி. திருமூர்த்தி, சென்னை

இடம் : குமாரவாடி, மதுராந்தகம் வட்டம், செங்கல்பட்டு எம்.ஜி.ஆர். மாவட்டம். இவ்வூரில் புதுப்பிக்கப்பட்டுள்ள சிவன் கோயிலின் தென்புறத்து அதிட்டானத்தில் உள்ளது.

காலம் : பல்லவ மன்னன் நிருபதுங்கவர்மன், கி.பி. 878

செய்தி : இக்கல்வெட்டு களத்தூர்க் கோட்டத்து வையியாவூர் நாட்டுக் குமாரபாடி என்னும் ஊரில் புத்தபெருமானார் என்னும் படைத்தலைவனின் மனைவியான அரைசடி களார் அவர்களால் எழுப்பப்பட்ட சிவன் கோயிலும், அக்கோயிலைப் பராமரிப்பதற்கு நிலங்கள் மற்றும் நந்தவனம் முதலானவற்றைத் தானம் அளித்திட்ட செய்திகளையும் கொண்டுள்ளது.

1 *கோவிசைய்யந் நிருப தொங்க விக்கிரமபருமற்கு யாண்டு ஒன்பதாவது களத்தூர் கோட்டத்து வைய்யாவூர் நாட்டுக் குமாரபாடி அன்(டு)றை அரையர் புத்தபெருமானார் தேவியார் குணப்பெருமானார் தாயார் அரைசடிகளார் செய்யப்பட்ட செறுவான்ன ஈஸ்வரகரம் இதற்குப் போக மச்செறுவும் கீழைக்கோட்டச் செறுவும் மேட்டுச் செறுவும் முள்ளிட்ட நிலமும் நந்தவானத்துக்கெல்லை கீழ்பா லெல்லை.*

2 *மேட்டுச்செறுவின் மேற்கும் தென்பாலெல்லை வீரப்புலியார் தோட்டத்தின் வடக்கும் மேல்பாலெல்லை வதியின் கிழக்கும் வடபாலெல்லை கீழைக்கோட்டைச் செறுவின் தெற்கும் இந்நாற்பால் உள்ளிட்ட நந்தவானமும் இச்சொல்லப்பட்ட பூமியும் இதற்கு செயிதோம் இது ரஷித்தார் திருவடி எம்முடி மேலின இத்தளியும் போகமுங் காத்தார் பரமேஸ்பர ப்ராஸிதகளாக.*

* இக்கல்வெட்டு ஆய்வில் உதவிபுரிந்த சென்னைப் பல்கலைக்கழகத் தொல்பொருள் துறை இணைப்பேராசிரியர் ப. சண்முகம், கட்டுரையினை அளித்திட அனுமதி வழங்கிய இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையின் சென்னை வட்டக் கண்காணிப்பாளர் முனைவர் ப. நரசிம்மையா ஆகியோர்களுக்கு நன்றி.



# 3. தொண்டை நாட்டில் புதிய கல்வெட்டுக்கள்

ம.காந்தி, வேலூர்
ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.

## அ. முதலாம் ஆதித்த சோழனின் ஆனாங்கூர் கல்வெட்டு

இடம் : விழுப்புரம் இராமசாமி படையாச்சியார் மாவட்டம், செஞ்சி வட்டம், செஞ்சியிலிருந்து 15 கி.மீ. (திண்டிவனம் செல்லும் வழியில்) தொலைவில் உள்ளது ஆனாங்கூர் என்னும் ஊர். இவ்வூரைச் சேர்ந்த முத்தையா என்பவருடைய நிலத்திலுள்ள ஒரு பாறையில், வெட்டப்பட்டுள்ளது.

மன்னன் : முதலாம் ஆதித்த சோழன், 16 ஆவது ஆட்சியாண்டு கி.பி. 887

செய்தி : இக்கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டும், இராசகேசரி என்ற சொல்லைக் கொண்டும், இது முதலாம் ஆதித்த சோழன் கல்வெட்டு எனக் கருதலாம். தொண்டை மண்டலத்தில் கிடைக்கக் கூடிய ஆதித்த சோழனின் கல்வெட்டுக்களில், இக்கல்வெட்டு காலத்தால் முந்தியதாகும். ஆதித்த சோழன் தொண்டை மண்டலத்தை பல்லவ மன்னன் அபராஜிதவர் மனிடமிருந்து கி.பி. 890 ல் கைப்பற்றியதாக அறிஞர் நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார். ஆனால் இங்கு ஆதித்த சோழனின் 16 ஆவது ஆட்சியாண்டு (கி.பி. 887) கல்வெட்டுக் கிடைத்திருப்பதால், ஆதித்த சோழன் தொண்டை மண்டலத்தை அபராஜிதவர்மனிடமிருந்து கி.பி. 887க்கு முன்பாகவே கைப்பற்றியதாகக் கருதலாம். ஆனாங்கூர் அக்காலத்தில் 'ஆனாவூகூர்' என அழைக்கப்பட்டு வந்துள்ளது.

1 *ஸ்வஸ்திஸ்ரீ இராசகேசரி ப*
2 *ருமற்கு பதினாறா*
3 *வது ஆனாவூகூர் உடைய*
4 *விருதேவி.....மெ..ல*
5 *தூ ம்.*

## ஆ. மூன்றாம் இராசநாராயண சம்புவராயரின் செவலப்பிறைக் கல்வெட்டு

இடம் : விழுப்புரம் இராமசாமி படையாச்சியார் மாவட்டம், செஞ்சி வட்டம், செஞ்சியிலிருந்து 8 கி.மீ. தொலைவில் செவலப்பிறை என்னும் ஊர் உள்ளது. இவ்வூரிலுள்ள அகத்தீசுவரர் கோயில் நிலத்தில், ஒரு கற்பலகையில் இக்கல்வெட்டு உள்ளது.

காலம் : மூன்றாம் இராசநாராயண சம்புவராயன், 19 ஆவது ஆட்சியாண்டு, கி.பி. 1375.

செய்தி : செவலப்பிறையிலுள்ள ஈசுவரன் (அகத்தீசுவரன் கோயில்) கோயிலுக்கு மூன்றாம் இராசநாராயண சம்புவராயன் திருநாமத்துக் காணியாகத் தந்த சோனாடு கொண்டான் திருவீதி 'அஞ்சினான் புகலிடம்' ஆகும்.

1 *ஸ்வஸ்திஸ்ரீ யாண்டு*
2 *பத்தொன்பதாவது*
3 *சகலலோக சக்கரவ*
4 *த்தி இராஜநாராயண*
5 *ன் திருமல்லிநாதன்*
6 *சம்புவராயன் திரு*
7 *நாமத்து காணி*
8 *ஆக தந்தசோனா*
9 *டு கொண்டான் திரு*
10 *வீதி அஞ்சினான் பு*
11 *கலிடம்*



## இ. வென்று மண்கொண்ட சம்புவராயர் கால கோவிந்தச்சேரி கல்வெட்டு

இடம் : வடஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டம், வாலாஜா பேட்டை வட்டம், கோவிந்தச் சேரி என்னும் ஊரில் ஞானமலையில் உள்ள பாலசுப்பிரமணியர் கோவிலுக்குச் செல்லும் வழியில் சுனைக்கருகில் உள்ள பாறையில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 1430

செய்தி : வென்று மண்கொண்ட சம்புவராயரின் 18ஆவது ஆட்சியாண்டில் (கி.பி. 1430), கோவிந்தச்சேரி, ஞானமலையிலுள்ள கோயிலுக்குச் செல்ல, சம்புராப் ப(ழு)ரையர் மகன் காலிங்கராயர் படிகள் வெட்டி அமைத்த செய்தி கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. இக்கல் வெட்டில் மன்னன் மெய்க்கீர்த்தி, பெயர், ஆட்சியாண்டு சிறிய எழுத்துக்களிலும் கொடை, கொடையளித்தவரின் பெயர் பெரிய எழுத்துக்களிலும் வெட்டப்பட்டுள்ளன.

1 *(சகல) உலோகச் சக்*
2 *(கரவ) த்தி வென்று*
3 *(ம) ண் கொண்ட (ச)*
4 *(ம்புவ) ராயர்க்கு யாண்டு 18*
5 *சம்புராப் ப*
6 *(ழு) ரையர் மகன்*
7 *காலிங்க ரா*
8 *யர் அடிப்பித்*
9 *த படி*

1 சுபமஸ்து
2 ஸ்வஸ்திஸ்ரீ மன்மகாமண்ட
3 லேஸ்வரர்ஸ்ரீ வேங்கடபதி தேவ
4 மகாராயர் பிரிதிவிராச்சியம் ப(ண்)ணி
5 அருளாநின்ற சகார்த்தம் 1527
6 மேல் செல்லாநின்ற விசுவாவசு
7 வருஷம் மிது(ன) ஞாயிற்று பூர்வபக்ஷத்து சத்த
8 மி குருவாரம் பெற்ற உத்திரத்து நாள் திருவிர
9 ஞ்சைபுரம் உடையார் வழித்துணை நாயினார்
10 கோயில் தர்மம் விக்ரமாதித்த ஆதிராசர்
11 ஏரி சிற்றேரி மீன்விலையும் ஏரி காணி பாஞ்ச
12 துக்கு பொதுவிலே கலம் நெல்லுக்கு மு (ந்நா)
13 ழி விழுக்காடு எடுத்து ஏரி வெட்டி வி
14 க்க கடவராகவும் மன் மஹமண்டலே
15 ஸ்வரன் மாராசு கோ நெட்டி ரங்கனாத ரா
16 ஐயன் குமாரன் தருவணாத ராஜயன்
17 கட்டளை யி
18 ட்ட தர்மம் யி துக்கு
19 ஆராகிலும் அகிதம் ப(ண்) ணி
20 னவர்கள் காசியிலே
21 கெங்கைக் கரையில் கா
22 ராம் பசுவை கொன்ற தோஸத்
23 திலே போககடவராகவும் உ
24 மாநியகாறருக்கு பயிர் ஏறின நிலத்து
25 க்கு நூறு குழிக்கு தூணி பதக்கு
26 நெல்லு விழுக்காடு எடுத்து ஏரிவெட்டி
27 விக்க கடவராகவும் யிந்த தர்மத்துக்கு
28 யாதொருவர் அகிதம் பண்ணி.வி.
29 .ந.ளைத் தோட்டிக்கு பெண்டு வி
30 ட்டவன் உ



# 4. முதலாம் இராசராச சோழரின் புன்னப்பாக்கம் கல்வெட்டு

சு. சுவாமிநாதன், மைசூர்

இடம் : புன்னப்பாக்கம், திருவள்ளூர் வட்டம். அங்குள்ள பாழடைந்த கோயிலின் அருகே உள்ள கல்வெட்டு

காலம் : முதலாம் இராசராசன், கி.பி. 1013

செய்தி : கோராஜராஜகேசரி பா்மரான ஸ்ரீராஜராஜதேவரின் 28 ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1013) சாளுக்கிய அரசரான விமலாதித்த தேவரின் படைத் தலைவரான நிவாணன் என்பவரின் மணவாட்டியான எழுவக்கன் என்பவர் தன் தம்பி குலநாதனுக்காக ஒரு கொடை அளித்துள்ளார். அது யாதெனில் வெண்க நாட்டிலுள்ள புன்னைப்பாக்கம் என்ற ஊர்க்குத் தெற்கில் தோண்டப்பட்டுள்ள முருகன் ஏரி என்ற ஏரியின் பராமரிப்புக்காக (ஏரிப்பட்டியாக) இவ்வூரின் கீழ்புலத்திலுள்ள ஐந்நூறு குழி நிலத்தை புன்னைப்பாக்கத்து ஊரார்க்குப் பொன் குடுத்து வரி விலக்குச் செய்து அளித்தார்[1].

1 சுவத்திஸ்ரீ திருமகள் போல பெ(ப)ரு
2 நிலச் செல்வியுந் தநக்கே யுரிமை பூண்டமை
3 மனக் கொளக் காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி
4 வேங்கை நாடும் கங்கபாடியும் தடிகை வழிய
5 ம் நுளம்பபாடியுங் குடமலை நாடுங் கொல்
6 லமும் கலிங்கமும் எண்டிசை புகழ்தர ஈழ
7 மண்டலமும் இரட்டபாடி எழரை இலக்கமும்
8 திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்ட தன்னெழி
9 ல் வளர் ஊழியுழ் எல்லா யாண்டும் தொழுதகை
10 விளங்கும் யாண்டே செழிஞரைத் தேசுகொள்
11 ஸ்ரீகோவிராஜராஜ கேசரிபர்மராந ஸ்ரீரா
12 ஜ ராஜதேவற்கு யாண்டு 28 ஆவது சளு
13 க்கி விமலாதித்த தேவ ஸ்ரீதண்டநாயக.. நிவா
14 ணன் மணவாட்டி எழுவக்கநேன் என் தம்பி ..

1. ARE., 1953, No. 271

15 (குலநாத)நுக்காக வெண்க நாட்டுப் புன்னைப்
16 பாக்கத்து தெற்குக் கல்லுவித்த முருகன் ஏரிக்கு
17 (ப்ப)ப்பட்டியாக இவ்வூர்க்குப் பொன் குடுத்து இறை இ
18 ழிச்சி வைச்ச நிலம் இவ்வூர்க் கீழ்ப் புலத்தில்
19 கிழக்கடைய அஞ்ஞூறு குழி இவ்வேரிக்கு ஏரி
20 ப்பட்டியாக வைச்சேன் எழுவக்கநேன் இ
21 தந்மம் இரஷிப்பான் அடிப்பொ
22 டி என்றலை மேலது

முதலாம் இராஜராஜ சோழனின் மகளான குந்தவையை மணம் புரிந்த சளுக்கிய அரசர் விமலாதித்தர் கி.பி. 1011 ஆம் ஆண்டு சளுக்கிய அரசரானார். இவர் இதே காலத்தில் சோணாட்டில் தன் மாமன் இராஜராஜன் காலத்தில் இருந்தவர் என்பது சில கல்வெட்டுக்களிலிருந்து புலனாகிறது[2]. திருவலஞ் சுழியிலுள்ள ஒரு கல்வெட்டு (கி.பி.1010) 'ஸ்ரீராஜராஜதேவர் திருமகளார் விமலாதித்த தேவியார் ஸ்ரீகுந்தவை நங்கையார் தேவர்க்கு அளித்த பொன்' என்று கூறுகிறது[3]. முதலாம் இராஜராஜனின் திருவையாற்றுக் கல்வெட்டு[4] (கி.பி.1014) ஸ்ரீவிஷ்ணுவர்த்த மகாராஜாவாகிய விமலாதித்ததேவர் வடகரை ராஜேந்திரசிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுத் தேவதானம் திருவையாற்று ஓலோகமாதேவி ஈஸ்வரமுடைய மகாதேவர்க்கு குடுத்த வெள்ளிக் கலசத்தைக் குறிப்பிடுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக தக்கோலம் கல்வெட்டு[5] 'கோவிமலாதித்தபந்மற்கு யாண்டு 3வது தக்கோலத்துத் திருவூறல் தேவநார் மகள் திருவூறல் நங்கை மகள் அத்தியூர் நங்கை திருவூறல் மகாதேவர்க்கு வைத்த நொந்தா விளக்கு' என்கிறது. இப்பகுதியில் விமலாதித்தரின் செல்வாக்கும், அதிகாரமும் அங்கீகரிக்கப்பட்டதாக இருந்திருக்க வேண்டும். இவருடன் சோணாட்டில் இவரது குடும்பத்தினரும், அலுவலர்களும், அதிகாரிகளும் இருந்திருக்கவேண்டும் என்று

2. ARE.., 1953, p.15
3. தெ.இ.க., தொகுதி 8, எண் 234
4. தெ.இ.க., தொகுதி 5, எண் 514
5. தெ.இ.க., தொகுதி 5, எண் 1364



ஊகிக்க இடமுண்டு. இக் காலத்தில்தான் சளுக்கியப் படைத் தலைவரின் மைத்துனரான குலநாதனும் சோணாட்டிற்கு வந்திருந்து நோய்வாய்ப்பட்டு இறந்திருத்தல் கூடும். எனவே அவரது நினைவுக்காகவும், நிறைவுக்காகவும் அவரது தமக்கையான எழுவக்கன் ஒரு நிலம் எரிப்பட்டியாக அளித்த துடன் இறை நீக்குவதற்காக ஊராரிடம் பொன்னும் கொடுத்தார். இவ்வேரியையும் தன் தம்பியின் நன்மையின் பொருட்டு இவரே கல்லுவித்திருக்கலாம்.

இறந்தவரின் ஆத்மா நிறைவு அடைவதற்காக நீரளிப்பதோ, தண்ணீர்த்தொட்டி அமைப்பதோ, குளம் வெட்டுவதோ வழக்கம். இன்றும்கூட இறந்தவரின் தாக சாந்திக்காக நீரும், எள்ளும் விடுவது உண்டு[6]. முதலாம் இராசராசனின் திருச்செங்கோடு செப்பேடு[7] (கி.பி. 995) மழவராயன் கொல்லி மழவன் என்பவர் ஈழத்தில் பட்ட தனது தந்தையின் ஆத்ம நிறைவுக்காக ஒரு கிணறு வெட்டினார் என்று கூறுகிறது. இதே மன்னரின் உடையார்குடிக் கல்வெட்டு[8] (கி.பி. 987) இளவல் ஆதித்தன் கரிகால சோழனைக் கொன்ற அதிகாரிகள் இரண்டே முக்கால் வேலி ஒரு மா நிலத்தை வெண்ணையூர் நாட்டு நக்கன் அரவணையானான பல்லவ முத்தரையனின் மகனான பரதன் வியாளகஜமல்லப் பல்லவரையன் என்பார் விலைக்கு வாங்கி இதனை திருவநந்தீஸ்வரத்து பட்டாரகர் கோயில் முன்பு கட்டப்பட்டுள்ள மூவாயிரத்து நூற்றுவனான நிலையம்பலத்து தண்ணீரட்டும் அந்தணரின் பராமரிப்புக்காக அளித்தார் என்கிறது. இது அகால மரணமடைந்த ஆதித்த கரிகாலரின் மகாதாகத்துக்கு அளிக்கப்பட்டது என்று ஊகிக்கலாம். முதலாம்

6. இப்போதும்கூட பல செல்வந்தர்கள் இறந்துவிட்ட தங்களது உறவினரது நினைவாய் பொது இடங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்து வழிப்போக்கர்களுக்கு நீரும் நீர்மோரும் அளிக்கும் பழக்கம் உள்ளது.
7. ARE., 1915, Part II, p.118
8 EI., 21, p. 168—169

# 6. பனங்குளம் கல்வெட்டு

அ.சந்திரபோஸ், கொத்தமங்கலம்

இடம் : பனங்குளம், ஆலங்குடி வட்டம், புதுக்கோட்டை மாவட்டம். இக் கிராமத்தில் உள்ள பெருமாள் கோயிலின் முன்பாக உள்ள கல்லில் கல்வெட்டு உள்ளது.

காலம் : முதலாம் குலசேகர பாண்டியன், கி.பி. 1300

செய்தி : இராசநாராயணபுரத்துத் திருவெட்பூருடையான் திருவன் கண்டனான சந்தவனப்பெருமாள் என்ற அரசு அதிகாரி பனங்குளத்திலுள்ள பெருமாள் கோயிலுக்குப் பூசைத் திருப்பணி செய்வதற்காக ஆண்டு ஒன்றுக்கு மூன்று பணம் கொடுப்பதாகக் கல்லிலும், செம்பிலும் வெட்டிக்கொள்க என கூறப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் மூலம் 14ஆம் நூற்றாண்டு வாக்கில் பனங்குளம் பகுதி வாழவந்த பெருமாளான உடையார் காலிங்கராயர் மூலமாக முதலாம் குலசேகரப் பாண்டியனால் ஆட்சி செய்யப்பட்டிருக்கிறது என அறியலாம். 'தானவ நாடு' எனக் குறிப்பிடும் இக்கல்வெட்டு, தாணான்மை நாடு என அழைக்கப்படும் பகுதிகளிலிருந்து கிடைத்தது. "தாணான்மை நாடு" என்பது தாவை நாட்டின் திரிபு ஆக இருக்கலாம். தாவை நாடு பற்றிய வரலாற்று ஆய்வுக்கு இக்கல்வெட்டை ஒரு முக்கிய அடிப்படை ஆதாரமாகக் கொள்ளலாம்.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீமத்
2 கீத்திக்கு மேல்
3 கோமாற பன்மரா
4 ன திரிபுவனச் சக்கர
5 வத்திகள் எம்மண்
6 டலமுங்கொண்
7 டருளிய ஸ்ரீகுல
8 சேகர தேவற்கு
9 யாண்டு 32 வது
10 மிதுன நாயிற்று
11 பூர்வ பஷத்து ஸ
12 ப்தமியும் வெள்ளி
13 க் கிழமையும்
14 பெற்ற அத்தத்து
15 நாள்த் தானவனா
16 ட்டு அரசு வாழ
17 வந்த பெருமா
18 [ளா]ன உடை
19 [யார்கா] லிங்க
20 .........
21 [வந்]த பெருமாள
22 கரகத்துக்கு கீழ்
23 குண்டாற்று இரா
24 ச நாராயணபுரத்
25 துத் திருவெட்பூரு
26 டையான் திருவ
27 ன் கண்டனான [ச]
28 ந்தவனப் பெரு
29 மாள் உகந்தருள
30 ப் பண்ணின நா
31 யனார் கண்ணிறை
32 ந்த விண்ணகர் எ
33 ம்பெருமானுக்
34 கு நித்த நிமந்த முள்
35 ளிட்ட திருப்பணி
36 .............
37 [னறு நம்] பேரிட்டு
38 ........காலிங்க
39 ராயன் பெருந்தெருவி
40 ல் மனைக்கு ஆண்டு
41 ஒன்றுக்கு மூன்று ப
42 ணம் இந்நாயனாற்
43 கு இறுத்திருப்பார்களா
44 கவும் இப்படிக்குச் சந்த்ரா
45 தித்துவற் செல்வதாக
46 செம்பிலுஞ் சிலை
47 யிலும் வெட்டி
48 க் கொள்க இப்ப
49 டிக்கு இவை காலிங்
50 கராயன் எழுத்து காரி
51 யத்துக்குக் கடவ அஞ்
52 சாதான் வானவதரை
53 ய விழுப்பரையன்
54 எழுத்து கணக்கு பெ
55 ருவாயலுடையா
56 ன் செல்வனா [ன].......
57 ன் எழு [த்து]

* கல்வெட்டு பற்றித் தகவல் தந்த வழக்கறிஞர் M.K. செல்வக்குமார் அவர்களுக்கும், படியெடுக்க உதவிய கரு. இராசேந்திரன் அவர்களுக்கும் நன்றி.

## 7. பஞ்சம்பட்டிக் கல்வெட்டு

பி. சந்திரசேகரன், *ராஜபாளையம்*
சொ. சந்திரவாணன், *குற்றாலம்*

இடம் : பஞ்சம்பட்டி, காமராசர் மாவட்டம், ஈழம் திறை கொண்டான் குளத்திலுள்ள கல்வெட்டு.*

காலம் : மதுரை நாயக்க மன்னர் கிருட்டிணப்ப நாயக்கர், கி.பி. 1595-1601

செய்தி : குளத்தில் உள்ள மீன்களைப் பிடித்துக் கொண்டு அதற்குப் பதிலாக வருடந்தோறும் குளத்தை ஆழப்படுத்திக் கொடுத்ததை இக்கல்வெட்டுக் குறிக்கிறது.

1 .............
2 ஆனி ஸ்ரீ மது வீ
3 ரப்பநாயக்கரய்யன்
4 கிட்டிணப்ப நாயக்க
5 ரய்யன் காரியத்து
6 க்கு கத்தறான மார
7 ண் தேவமுதலி
8 யார் புனல் வேலி
9 மருத்துவனேரி
10 குளத்திலுண்டா
11 ன பாசி விலையுண்
12 (டா)ணது குடியிலே
13 பிடிச்சுப் போட்டு
14 குளத்திலே வருச
15 ந் தோறுங் குளி வெ
16 ட்டி வருவார்களாக
17 இதுக்கு யாதாமொ
18 ருவன் விக்கினஞ்
19 சொன்னவன்
20 கெங்ககரையி
21 லே நின்று மே
22 ய்கிற காராம்
23 பசுவைக் கொ
24 ன்ற தோஷ
25 த்திலே போக
26 க் கடவரா
27 கவும் மாதா
28 பிதாவைக்
29 கொன்ற
30 தோஷத்தி
31 லே போவா
32 ற்களாக

* இக் கல்வெட்டு கண்டுபிடிக்க உதவிய பஞ்சம்பட்டி திரு. கனி இராசா அவர்களுக்கு நன்றி.



## 8. பனையூர் மறவர் பட்டயம்

கரு. இராசேந்திரன், *மேலப்பனையூர்*

புதுக்கோட்டைப் பகுதியில் கிடைக்கும் மறவர் சமுதாயச் செப்பேடுகளில் இரண்டு இங்கே அளிக்கப்படுகின்றன. கோனாடு பொன்னமராவதி நாட்டு வடபற்றில் உள்ள பனையூர் குளமங்கல ஊரார் மறமன்னர் சிலருக்கு அளித்த நிலக்கொடை' மனைக் கொடை ஆகிய விவரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

விசய நகரக் காலத்தில் அவர்கள் செப்பேட்டு மெய்க்கீர்த்திப் பாணியில் அமைந்த இச் செப்பேடுகளுக்கிடையே ஒரு ஒற்றுமை காணப்படுகிறது. கி.பி. 1478 இல் எழுதப்பட்டதாகக் காணப்பட்டாலும் உண்மையில் இவை இன்னும் சில நூற்றாண்டுகள் பிந்தையது என்பது புலப்படும்.

மறமன்னர்கள் பெயரும் (சேது காவல் புரையர், வலம்புரிப் புரையர், அவிராயப் புரையர், ஐநூற்றுப் புரையா, அவர்கட்குரிய சிறப்புப் பெயரும் (கலங்காத கண்டன், ஆனை வெட்டி மாலை சூடும், மதமடக்கி) குறிக்கப் பெறுகின்றன.

மூவேந்திர வேளார் (மூவேந்த?) என்பது போன்ற பழைய பெயரமைதியும் குறிப்பிடத்தக்கது. இவற்றில குறிப்பிடப் பெறும் முத்திரி முத்தரையரோடு தொடர்புடையது என்பர். புதுக்கோட்டை மக்கள் குடியேற்ற வரலாற்றுக்கு இன்றியமையாச் சிறப்புச் செப்பேடுகள்.*

1 ஸ்ரீமகா மண்டலீசுபரன் அரி
2 ய தளவியபாடன் பாஷசக்கி த
3 ப்பு மூவராய கன்டன் கன்ட நா
4 டு கொன்டு கொன்டநாடு குடாதா
5 ன் பான்டிமன்டலத்தார் பஞ்

* ஆவணம் 3இல் வெளிவந்த இரா. இராமமூர்த்தி 'புதுக்கோட்டை வட்டார நிலத்தரசுகள் செப்பேடு[...] கட்டுரையோடும், ஆவணம் 4 இல் வெளிவந்த கரு. இர[...] 'வரலாற்றுப் பார்வையில் பனையூர் குளமங்கலம்' என்ற க[...] தொடர்புபடுத்திப் படிக்கவும்.

6 சாளனாசாரியரு சோள மன்டல
7 பிறதெச்சனாசாரியார் தொன்
8 டமன்டலப் பிறதாபன் ராசாதி
9 ராசன் ராசமாதான்டன் மல்
10 லிகச்சி ராயர் மகா ராயர் வீமரா
11 யர் அசபதி கெஷபதி நரபதி
12 தெச்சினாதிபதி பிறிதிவு ராச்சிய
13 பாரம் பன்னி யருளாயி நின்
14 ற சாலிகவாகன சகாத்தம்
15 1400க்கு மேல் செல்லாயி நின்றென
16 நந்த(ன) வருஷம் வய்யாசி மாதம் 5 உ சிய சோ
17 ள கெ.ம்பீர வளநாடாகிய கோ
18 னாட்டில் பிறமலை சூள்ந்த பொன்
19 னமராபதி நாட்டில் வடபத்தில் கூ
20 டலூராகிய பனையூர் குளமங்
21 கலம் ஊராமைய்ந்த ஊரவ
22 ர் அனைவருள்ளிட்டாரும் கூடி
23 கரைப்பிரியல் பட்டயம் வகை
24 யாவது வாள்க்கோட்டை ரா
25 யன் சேதுகாவல்ப் புரையர் ம
26 றமன்னர் கலங்காத கன்
27 டன் அவிராயப் புரையர் வயிர
28 மதிச்சான் வுள்ளிட்டாற்க்கு
29 ம் ஆனைவெட்டி மாலைசூடும் அன்
30 னூத்து புரையர் வளைஞ்சுவெ
31 ட்டி உள்ளிட்டார்க்கும் கரை ஊ
32 றது புரவில் ஒன்பதுலே ஒருக
33 ரைக்கி வகைப்பிரியல் நஞ்சை
34 சயில் பனைய க்

2 ஆம் பக்கம்

35 குளம் வயல் நஞ்சை கண்டது
36 க்கும் குளமங்கலம் கம்மாய்
37 வயல் நஞ்சை கண்டதும் கூதா
38 டன் முத்திரி கம்மாயி வயல்
39 நஞ்சை கண்டதும் ஆக வகை
40 3க்கு ஒன்பதுக்கு ஒருகரை
41 நஞ்சையும் சேர்சேந்த மங்
42 கலம் நத்தம் தெக்கு ஏந்தல் நஞ்
43 சை கண்டதும் சம்மந்தன் ஏ



44 நந்தல் நஞ்சை கண்டதும் ஆலன்
45 ஏந்தல் நஞ்சை கண்டதும் ஆக
46 வகை 2க்கு துகை 6க்கு நத்தம்
47 ங்குடிகாடு ரென்டுக்கு பிஞ்சை
48 அளந்து கண்டது விரை துகை
49 க விரையடி 540 3/4 ஒன்ப
50 துக்கு ஒரு பங்கு விரையடி
51 60 3/4 விரையடி பிஞ்சையும்
52 நஞ்சையும் மனைக்கானி
53 யாச்சி பனையூருல் அம்பலம் ந
54 டுவீதி 100 அடி (அ)களம் கிளக்கு
55 மேற்கு தெக்கு வடக்கு கோட்டை
56 க்கரை கண்ட (மட்டு)க்கும் நிற்ப
57 து குளமங்கலமும் யிந்தபடி நி
58 ற்பது யிப்படிக்கி ஸைஷ்யூர் நாட்டு
59 க்கனக்கு அறுகாத வட்டகை
60 மூவேந்திர வேளார் சொல்படி திருப்
61 பூ அளகிய நாயகி ஒலியவ
62 ள் துணை உ

பட்டயம் 2

1 உ ஸ்ரீமகா மன்டலீசுபரன் அரிய
2 தள விபயாடன் பாசைக்கித் த
3 ப்பு மூவராய கன்டன் கன்ட நா
4 டு கொன்டு கொன்டநாடு குடாதா
5 ன் பாண்டிமன்டலத்தார் பஞ்சா
6 ளனாசாரியார்சோலமண்டலப் பி
7 றதாபன் தொன்டைமன்டலத்தார்
8 ராசாதி ராசன் ராசமாதான்டன்
9 மல்லிகச்சிராயர் மகாராயர் வீமரா
10 யர் விசையராயர் அசுபதி கெஷபதி
11 நரபதி தெச்சினாதிபதி பிறிதிவுரா
12 ச்சிய பாரம் பன்னி யருளாயி நி
13 ன்ற சாலிகவாகன சகாத்தம்
14 1400க்கு மேல் செல்லாயி நின்றெ்ன
15 நந்தன வருஷம் வய்யாசி மாதம் (எ) 7 உ சி
16 சோள கெம்பீர வளாநாடாகிய
17 கோனாடு பிறமலை சூள்ந்த பொன்
18 ணமராபதி நாட்டில் வடபத்தில்
19 கூடலூராகிய பனையூர் குளமங்

20 கலம் ஊராமைய்ந்த ஊரவர்
21 அனைவருள்ளிட்டாருங் கூடி கரை
22 ப் பிரியல் பட்டயம் வகையாவது
23 வாள்க்கோட்டைராயன் சேது
24 காவல்ப்புரையர் மறமன்
25 னர் (வா) வாசி மதையானை சிலம்
26 பாதேவனுள்ளிட்டாற்க்கும்
27 மதமடக்கி விசையாதேவன் வ
28 லம்புரிப்புரையா ருள்ளிட்டாற்
29 க்கு ஊரது புரவில் ஒன்பதுலே

2 ஆம் பக்கம்

30 ஒரு கரைக்கி வகைப்பிறிவில்
31 நஞ்சையில் பனையக்குளம் வய
32 ல் நஞ்சை கன்டதும் குளமங்க
33 லம் கம்மாய் வயல் நஞ்சை கன்ட
34 தும் கூதாடன்முத்திரி கம்மாய்
35 வயல் நஞ்சை கன்டதும் ஆக வகை
36 3க்கு ஒன்பதுக்கு ஒரு கரை ந
37 ஞ்சையும் மானிக்கன்னேந்த
38 ல் நஞ்சை கன்டதும் புதுக்குரிச்
39 சி ஏந்தல் நஞ்சை கண்டதும் பா
40 ன்டியகலிங்கன் ஏந்தல் நஞ்சை
41 கன்டதும் ஆக வகை 2க்கு துகை 6க்கு
42 நத்தம் குடிக்காடு 2க்கு பிஞ்சை அள
43 ந்து கன்டது விரையடி துகை வி
44 ரை(யடி) 540 3/4 க்கு ஒன்பதுக்கு ஒருப
45 ங்கு 60 3/4 விரையடி காடும் பிஞ்
46 சையூம் மனைக்கானியாச்சி பனையூ
47 ரில் அம்பலம் நடவீதிக்கி கிளக்கு
48 நாலான் வீதியில் 100 அடி அகலம்
49 கிளக்கு மேற்கு தெக்கு வடக்கு கோட்
50 டைக்கரை கன்ட மட்டுக்கும்
51 நிற்ப்பது குளமங்கலத்துக்கும் யிந்
52 தப்படி நிற்ப்பது யிப்படிக்கு ஷையூர் ந.ா
53 ட்டுக் கனக்கு அறுகாத வட்டகை
54 மூவேந்திர வேளார் தீருப்பூ அளசி
55 யநாயாகி ஒலியவள் துனை உ.



# 9. இராமேசுவரம் செப்பேடு

செ. இராசு, தஞ்சாவூர்

அரசர் : வேங்கடபதி தேவ மகாராயர் (?)

காலம் : கி.பி. 1784

செய்தி : துறையூர் வெங்கடாசல ரெட்டியார் ராமேசுவரத்திற்கு அன்னதானம் செய்தல். (23 செ.மீ. x17.5 செ.மீ அளவுள்ள இச்செப்பேடு திருப்பனந்தாள் காசிமடத்தில் உள்ளது. தெலுங்கின் தமிழாக்கம் இங்கே தரப்படுகிறது).

1 ஸ்வஸ்திஸ்ரீ விஜயாப்யுதய சாலிவாஹன ச
2 காப்தங்கள் 1666 கல்யப்தம் 4845 ஆகிய இன்றய ரக்
3 தாஷி நாம வருடம் புஷ்ய பகுள அமாவாச்
4 யை சோமவாரம் சிரவண நட்சத்திரம் மகோதய புண்
5 யகாலம் கூடிய இந்த சுபதினத்தில் ஸ்ரீமத்ரா
6 சாதிராச ராசபரமேசுவர பிரதாப ஸ்ரீவர வெங்
7 கடபதி தேவ மகராயர் அவர்கள் கனகிர நக
8 ரத்தில் ரத்ன சிம்மாசநா ரூடராய் பிருத்வீ சாம்ராச்
9 சியம் செய்து கொண்டிருக்கையில் ராமேசுவரம் கிரி தனுஷ்கோடி
10 சாஸ்திரி அவர்களுக்கு சதுர்தகோத்திரம் செட்டிக் குளம் பல்ல கு
11 ல நல்லப்ப ரெட்டியார் அவர்கள் பேரன் இலிங்காரெட்டி இவர்கள் புத்
12 திரன் வேங்கடாசல ரெட்டி அவர்கள் உதக தாரா பூர்
13 வமாக கொடுத்த தான சாசனத்திற்கு கிரமம் எப்படி என்றால்
14 திருச்சிராப்பள்ளி சாவடி வடக்குக்கரை மளவ நாடு
15 தெண்ட வெளிப்பத்து பாச்சூர்
16 மாகாணத்திற்கு நாயகமான துரையூர் சீ
17 மையில் அபிந(வ) மங்கலம் என்னும் கிராமம் ராமேசுவ
18 ரம் அன்னதான தர்மத்திற்கும் எழுதி அன்னதா
19 ன தர்மத்திற்கும் தாராபூர்வமாய் கொடுத்தோம் ஆ
20 கையினாலே அதனில் கண்ட நஞ்சை புஞ்சி மாவடை மர
21 வடை நிதி நிட்சேப சல தரு பாஷாண அட்சீண ஆ
22 காமி சித்தசாத்தியங்கள் அபிரபோக தே(ய)
23 ஐ சாமியங்கள் தானாதி விநிமய(விக்)

24 கிரயங்கள் யோக்கியமாக ஆசந்திரார்
25 க ஸ்தாயியாய் புத்திர பௌத்திரர்கள் பாரம்பர்யமாக அ
26 நுபவித்துக்கொண்டு தர்மபரிபாலனம் செய்வ
27 வார்கள் ஆவாரென ராமேசுவரம் கிரி தநுஷ்கோடி சாஸ்திரிகள்
28 அவர்களுக்கு சதுர்த்த கோத்திரம் செட்டிக் குளம் பல்ல குல நல்லப்ப
29 ரெட்டியார் அவர்களின் பேரனான லிங்காரெட்டி அவர்கள்
புத்திரனான வெங்க
30 டாசல ரெட்டி அவர்கள் எழுதிக் கொடுத்த தானசாசனம்
31 தாமிர பட்டயம் ராயசம் ராமலிங்கய்யா கை
32 எழுத்து தானபாலயோர்மத்யே தானாச்ர
33 யோனுபாலனம் தானா ஸ்வர்க்க மவாப்நோதி பாலநா
34 தச்சுதம் பதம்: ஸ்வதத்தா த்விகுணம் புண்யம் பரதத்தா
35 நுபாலனம் பரதத்தாபஹரேண ஸ்வதத்தம் நிஷ்பலம்
36 பவேத்; ஏகைக பகிநி லோகே ஸர்ஷாமேவ பூ த்வி
37 ஜா: நபோஜ்யான கர க்ராஹ்ய விப்ரதத்தா வசுந்
38 தரா இந்த தர்மத்திற்கு எவர் கெடுதல் செய்கிறார்களோ
39 அவர்கள் காசியில் பசுவ் ‍ன கொன்ற பாபத்தில்
40 போவார்கள்

வேங்கடாசலபதி



# 10. பெருமுக்கல் கீறல் உருவங்களின் காலம் — ஓர் ஆய்வு நோக்கு

ஆர். வசந்தகல்யாணி, சென்னை

பெருமுக்கல் திண்டிவனம்-மரக்காணம் சாலையில் திண்டிவனத்திலிருந்து 11 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் மலைமேல் விக்கிரம சோழன் காலத்தில் கட்டப்பட்ட சிவன் கோயில் உள்ளது. இக்கோயிலில் ஐம்பதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன. இவை இக்கோயிலின் வரலாற்றையும் வளர்ச்சி நிலைகளையும் நமக்குத் தெளிவாகக் காட்டுவதாயுள்ளன.

இதே மலையில் குகை போன்றதோர் இடம் உள்ளது. இங்கு சீர்செய்யப்படாத பாறையில் செதுக்கப்பட்ட பொறிப்புகள் (Engravings) உள்ளன. இவ்வரைவுகள் தமிழ்நாட்டின் வரலாற்று உலகிற்கொரு புதிய சேர்க்கை[1] என்பது மறுக்க இயலாது. இக்கீறல் உருவங்கள் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் கூறப்பட்டன. அவற்றைப் பற்றி ஓரளவு ஆய்வு செய்து, கருத்தினைக் கூற முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

இப்பாறை வரைவுகளின் தொகுப்பில் மேல் வலப்புறம் 'பொந்சரன்' என்ற ஐந்து எழுத்துக்களைக் கொண்ட வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. எழுத்தின் வளர்ச்சி நிலை கண்டு இக்கல்வெட்டு கி.பி.6-7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கருதலாம். கல்வெட்டிற்கு நேர் கீழ் நீண்ட கழுத்துள்ள விலங்கு ஒன்று வலப்புறம் திரும்பிய நிலையில் காணப்படுகிறது. அதன் முதுகில் பல்லக்குப் போன்று சதுரக் கட்டமும் அதனுள் அமர்ந்துள்ள மனித உருவம் போன்ற அமைப்பும் காணப்படுகிறது. இதனையடுத்து இதே போன்று

1. பெருமுக்கல் மலைக் கீறல் வரைவுகளைக் கண்டுபிடித்தவர்கள் ஆசியவியல் நிறுவனத்தைச் சார்ந்த திரு.அ. தசரதன் மற்றும் திரு. ப. கன்னையன்.

மற்றொரு விலங்கும் உள்ளது. அளவில் சற்றுப் பெரியதாய்க் காணப்பட்டாலும் இவ்வுருவம் தெளிவாகத் தெரியவில்லை. அடுத்து இடது மேற்புறமும் தலையின்றிக் காணப்படும் ஒரு மனித உருவம் கோட்டுருவமாகச் செதுக்கப்பட்டுள்ளது. இரண்டு கைகளையும் உடலோடு ஒட்டி வைத்துள்ளன. கைகளில் விரல்களும் கோடுகளாகக் காட்டப்பட்டுள்ளன. கால்கள் நேராக உள்ளன. ஆனால் பாதங்களும், கால் விரல்களும் காட்டப்படாமல் உள்ளன. இவ்வுருவத்தின் அருகே மீன் போன்றதொரு பொறிப்பும் உள்ளது. நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ள விலங்கின் கீழே மற்றொரு மனித உருவம் தலையுடன் காணப்படுகிறது. தலையில் நீண்ட தலைமுடி இருப்பது போன்று காட்டப்பட்டுள்ளது. கைகள் உடலைவிட்டுச் சற்றுத் தள்ளி நீட்டிய நிலையில் உள்ளன. கால்கள் நேராக உள்ளன. இடையின் குறுக்காகப் பெருக்கல் குறிபோல் ஓர் அமைப்பு அல்லது அணி காணப்படுகிறது. இவ்வுருவத்திற்குக் கீழே சிறிய வட்டங்கள் உள்ளன. இவையே இப்பெரிய தொகுப்பில் உள்ள குறிப்பிடத்தக்க கீறல் வளைவுகளாகும். (படம் 1)

இனி இப்பெருமுக்கல் கீறல் வரைவுகளை வரலாற்றின் மூன்று காலகட்டங்களில் பொருத்திப் பார்த்துச் சரியான காலத்தினைக் கூற முற்படவேண்டும்.

(1) பெருமுக்கல் கீறல் வரைவுகள் அல்லது பொறிப்புகள் எகிப்திய வரிவடிவங்களான ஹிரோகிளிப்பிற்கு (Hieroglyph) முற்பட்டது.

(2) தொல்பழங்கால ஓவியங்களின் சமகாலத்தைச் சார்ந்தவை.

(3) வரலாற்றுக் காலத்தைச் சார்ந்தவை.

முதலாவதாக, முதலில் கூறப்பட்ட எகிப்திய ஹிரோகிளிப்பிற்கும் முற்பட்டது என்று கூறப்படும் கருத்தினை ஆய்வோம். பெருமுக்கல் கீறல் உருவங்களைப் பற்றி ஆய்வு செய்து இவை தமிழ் ஹிரோகிளிப் என்றும், இவைதாம் உலகிலுள்ள அனைத்துக் குறியீடுகளுக்கும் முன்னோடி என்றும் அதாவது எகிப்திய ஹிரோகிளிப்பின் காலம் கி.மு.5000 என்றும் அதற்கு முற்பட்டு இப்பெருமுக்கல் குறியீடுகளின் காலம் கி.மு.6000 என்றும்



நீண்டதொரு கட்டுரை[2] அண்மையில் வெளியிடப்பட்டது. இதன் அடிப்படையில் கட்டுரை முழுதும் மறுக்கப்படவேண்டி இருந்தாலும் அது நோக்கமல்ல. கீறல் உருவங்களின் விளக்கமும் அதன் சரியான வரலாற்றுக் காலமும் தான் என்ற நிலையில் கட்டுரைக்கு அடிப்படையான கருத்தான ஹிரோகிளிப் என்ற ஒன்றை மட்டும் ஆய்வு செய்வோம்.

ஹிரோகிளிப் என்பது எகிப்திய எழுத்தைக் குறிக்கும் கிரேக்கச் சொல். அதாவது 'ஹிரோஸ்' என்றால் புனிதம் என்றும் 'க்ளுபே' என்றால் பொறிப்பு என்றும் பொருள்[3]. எகிப்திய ஹிரோகிளிப் எழுத்துக்களானது க்யூனிபார்ம், சீன, மயன் எழுத்துக்களின் சமகாலத்தில் வழக்கத்தில் இருந்தவை. எகிப்திய பிரமிடுகளில் இறுதிக்கட்ட வளர்ச்சியுடன் கூடிய இவ்வெழுத்துக்கள் கிடைத்தாலும் இவை பிரமிடுகளுக்கு முற்பட்ட தொன்மைக் காலத்திலேயே தோன்றி வளர்ச்சி அடைந்திருக்கவேண்டும். தொன்மையான சித்திர எழுத்துக்கள், கருத்தெழுத்துக்கள், ஒலியெழுத்துக்கள் என்று படிப்படியாக இவ்வெழுத்துக்கள் வளர்ந்து கி.மு.300 ஆவது ஆண்டிலேயே நிலைபெற்று வளர்ச்சி பெற்றுவிட்டது. மேலும் க்யூனிபார்ம் எழுத்துக்களைப் போலல்லாது எகிப்திய எழுத்துக்கள் அந்நாட்டிற்கே உரியவை. எகிப்திலேயே தோன்றி எகிப்திலேயே வளர்ந்து அங்கேயே மறைந்தவை[4]. இவ்வெழுத்துக்களின் வளர்ச்சியினை மூன்று நிலைகளில் காணலாம்.

(1) சித்திரக் குறியீடானது காட்டப்பட்ட பொருளைக் குறித்தல்

2. A. Thasarathan and B. Kannaiyan, 'Tamil Hieroglyphs in Perumukkal Cave', **Journal of the Institute of Asian Studies,** Vol. X, No. 2.

3. Nina M. Davies, **Picture Writting in Ancient Egypt,** Oxford University Press, London, 1958, p.10; Donai M. Anderson, **The Art of Written Forms,** 3rd revised and enlarged edition, London, 1970, p.18.

4. T.V. Mahalingam, **Early South Indian Palaeography,** University of Madras, 1967, p.63.

(2) காட்டப்பட்ட பொருளோடு தொடர்புடைய செயலைக் குறித்தல்

(3) அக்குறியீடுகளின் மறைபொருளைத் தருதல்

என்று இந்த வளர்ச்சி நிலைகளுக்குச் சான்றுகளும் கிடைக்கின்றன. இதுவே தொடர்ந்து கருத்தெழுத்துக்களாகி ஒலியெழுத்துக் களாயின. பின்னர் ஒரு கால கட்டத்தில் சில வேறுபாட்டுடன் எழுதப்பட்டு அதுவே ஹிரார்டிக் (Hieratic) எனப்பட்டது. இவ்வகை எழுத்துக்களை Priestly script என்று அழைத்தனர். இதனை அடுத்து டெமாடிக் எழுத்துக்களாக (Demotic) வளர்ச்சிபெற்றது. இதனை Secular Script என்று வழங்கினர். எழுத்துக்களை வேகமாக எழுதவும் பொதுமக்கள் பயன்படுத்தவும் இவ்வாறு காலப்போக்கில் மாற்றம் பெற்றாலும் சில இடர்ப்பாடுகள் குறிப்பாக மெய்யெழுத்துக்களில் ஏற்பட்ட காரணத்தால் கி.மு. 2 ஆம் நூற்றாண்டு வாக்கில் கிரேக்க எழுத்துக்களில் எகிப்திய மொழி எழுதப்பட்டது.[5] இந்த வரலாற்றுப் பின்னணியில் பார்க்கும்போது பெருமுக்கல் கீறல் வரைவுகளுக்கும் எகிப்திய ஹிரோகிளிப்பிற்கும் எவ்வகை தொடர்பும் இல்லையென்பது உறுதி. முன்னர் குறிப்பிட்டது போல் எகிப்திய ஹிரோகிளிப் அங்கேயே தோன்றி வளர்ந்தவை என்பதால் கீறல் உருவங்கள் எகிப்திய எழுத்துக்களுக்கு முன்னோடி என்று கூறுவது உடன்பாடான கருத்தல்ல. இரண்டாவதாக எகிப்திய ஹிரோகிளிப் மிகத் தொன்மையான நிலையில் (Primitive stage) கூட ஒரு வரன்முறைக்குட்பட்டே வரையப்பட்டன அல்லது செதுக்கப்பட்டன என்பதற்கு ஏராளமான நேர் சான்றுகளைக் காண்கிறோம். மேலும் எழுத்துக் குறியீடுகளாகவோ, கருத்துக் குறியீடுகளாகவோ இருப்பின் வல இடமாகவோ, மேல் கீழாகவோ தொடர்ந்து நின்று பொருள் தருதல் வேண்டும். இந்த வரைமுறைக்குட்பட்ட நிலையை நாம் எகிப்திய எழுத்துக்களில் காண முடிகிறது. ஆனால் பெருமுக்கல் குறிகள் எந்த வகையிலும் தொடர்ந்த கருத்தினைத் தெரிவிப் பதாகப் பொறிக்கப்படவில்லை. மேலும் வரைமுறைக்குட்பட்டுச் செதுக்கப்பட்டுள்ளதாகவும் கொள்ள இயலவில்லை. இந்த நிலையில் தமிழ் ஹிரோகிளிப் என்ற சொல் வழக்கு இப்பெருக்கல் கீறல் வரைவுகளுக்கு ஏன் தரப்பட்டன என்பதை ஆய்வு செய்தோமானால் மாரிஸ்போப் என்பார் குறிப்பிடுவது போல் ஹிரோகிளிப் என்ற சொல் தவறான பல கருத்துகளுக்கு இடம் தருவதாக அமைந்துள்ளது என்பதே காரணம் எனலாம்.[6] எகிப்திய எழுத்துக்களான ஹிரோகிளிப் சித்திர எழுத்துக்களிலிருந்து உருவானவை. காலப்போக்கில் புரியாத புதிரான சித்திரங்கள் எல்லாவற்றையுமே இச்சொல் கொண்டு வழங்கும் நிலை வந்தது. இன்னும் கூறப்போனால் சித்திரக் குறியீடுகள் எல்லாமே ஹிரோகிளிப் என்று குறிக்கப்படுவதையும் காண்கிறோம்.[7]

இந்தியாவைப் பொறுத்தவரை எகிப்து, மெசபடோமியா போன்ற இடங்களில் இருந்தது போன்று எழுத்துக்கள் கருத்தெழுத்துக்களிலிருந்து வளர்ந்தன என்பதற்குச் சரியான விடையோ, சான்றுகளோ கிடைத்தில[8] என்ற நிலையில் மயக்கத்தைத் தருவதான ஒரு சொல்லோடு பொருத்தி அதற்கு விளக்கங்கள் கூறப்பட்டுள்ளது என்பதைத் தவிர பெருமுக்கல் கீறல் உருவங்கள் ஹிரோகிளிப்பும் அல்ல அவை எகிப்திய ஹிரோகிளிப்பிற்கு முன்னோடியும் இல்லை என்பது தெளிவு. அந்த மயக்கத்தில் உண்மையில் எழுத்துக்கள்கூடக் குறியீடு களாக்கிக் காட்டப்பட்டுள்ளன.[9]

ஆக பெருமுக்கல் கீறல் வரைவுகள் ஹிரோகிளிப் இல்லை என்று கொண்டு அடுத்த கால கட்டத்தில் அதனைப் பொறுத்திப் பார்ப்போம்.

5. Hans Jonson, **Sign, Symbol and Script**, p.72.

6. Maurice Pope, **The Story of Decipherment from Egyptian Hieroglyphic to Linear** B, p.203.

7. Leonar Cottrele (ed.), **The Concise Encyclopedia of Archaeology**, Hutchinson of London, 1970, p.172.

8. T.V. Mahalingam, **op cit**., p.40.

9. A. Thasarathan and B. Kannaiyan, **op cit**., pp. 137-138.

அதாவது தொல்பழங்கால மாந்தர் தம் காலத்தில் இவை செதுக்கப்பட்டனவா என்ற கருத்திற்கு ஆதாரங்கள் உள்ளனவா என்று ஆய்வு செய்தல் வேண்டும். இந்தியாவில் தொல்பழங்கால மனிதன் வாழ்விடங்களும் அவன் வரைந்த ஓவியங்களும், பொறிப்புகளும் பல கிடைத்துள்ளன. இந்தத் தொல்பழங்காலம் என்பது நாட்டுக்கு நாடு வேறுபட்டுள்ளது. அதே போன்று இந்தியாவிற்குள்ளும் அது சில இடங்களில் பெருங்கற்காலம், வரலாற்றுக்காலம் வரை நீடித்துள்ளது. இந்தியப் பாறை ஓவியங்களும், பொறிப்புகளும் உலோக மற்றும் புதிய கற்காலத்தினைச் சார்ந்தவைகளாகக் கொள்ளலாம். அவை எவ்வித எழுத்துக்களைப் பற்றியும் அறிந்திராத அவ்வக்கால மக்களின் தற்செயலான கைத்திறன் என்று மட்டும் கொள்ள இயலும். ஆகவே இவ்வகை ஓவியங்களும் பொறிப்புகளும் இந்திய எழுத்துக்களின் தோற்றம் மற்றும் வளர்ச்சிக்கு எவ்வகையிலும் உதவாத நிலையில்[10] பெருமுக்கல் கீறல் வரைவுகளை எழுத்துக்களின் முன்னோடி என்று ப.ரரமல் தொல்பழங்காலப் பாறைப் பொறிப்புக்களாக இருக்கக் கூடுமா என்று சான்றுகளைக் கொண்டு ஒப்புநோக்குவோமானால் வரலாற்றுக் கண் ணோட்டத்தில் அக்கால கட்டத்திற்குள்ளும் வரவில்லை என்பது விளங்கும்.

இந்தியாவில் கிடைத்துள்ள ஓவியங்கள் பொறிப்புக்கள் ஆகிய இரண்டனுள் ஓவியங்களே காலத்தால் முற்பட்டவை. அவ்வோவியங்கள் பெருங்கற்காலத்திலும் தொடர்ந்து காணப்படுகின்றன. பாறைப் பொறிப்புகளைப் பொறுத்தவரை ஓவியங்களுக்குப் பிற்பட்டதாகத்தான் கருதப்படுகிறது. இவையும் ஓவியங்கள போன்றே வேட்டைக் காட்சிகளையும், விலங்குகளையும் சித்தரிப்பனவாகவே உள்ளன. பொதுவாகத் தொல்பழங்கால ஓவியம் என்பதையும், அதன் காலத்தையும் வரையறை செய்ய விலங்கினங்களும் வேட்டைக்காட்சிகளுமே துணை நிற்கின்றன. விலங்குகளை வேட்டையாடும் காட்சிகள் முதல் நிலையாகவும், அவற்றைப் பழக்கி அதன்மேல்

10. T.V. Mahalingam, **op cit.**, p.41.



அமர்ந்துள்ளமை இரண்டாம் நிலையாகவும் கொள்ளலாம். இதற்கும் முந்திய கால நிலை ஒன்று உண்டு. அதாவது வனவிலங்குகளுடன் விலங்குகளைப் போல் வாழ்ந்த காட்டுமிராண்டி நிலை கொண்ட தொல்பழங்கால மனிதனின் படைப்புகள். இந்த நிலை ஓவியங்கள் இந்தியாவில் அதிகம் காணப்படவில்லை.[11] ஓவியங்களுக்கு உள்ள இந்த அடிப்படையில்தான் பாறைப் பொறிப்புகளும் காணப் படுகின்றன. மிகப் பழமையான பாறைப் பொறிப்பு காஷ்மீரிலுள்ள பூர்ஜஹாம்[12] என்ற இடத்தில் கிடைத்துள்ளது. இவை தவிர பெல்காம் மாவட்டம் கொம்பிகுட்ட (Kombigudda) மலையிலும், மைசூர் மாநிலத்திலுள்ள சில்டதுர்க் என்ற இடத்திலும், பெல்லாரிக்கு அருகிலுள்ள குப்பகல்லு (Kuppagallu) என்ற இடத்திலும் கிடைத்துள்ளன. மேற்குறிப்பிட்ட இடங்களிலுள்ள உருவங்கள் அனைத்துமே விலங்குகள் மற்றும் விலங்குகளை வேட்டையாடும் மனித உருவங்களாகவே உள்ளன. மேலும் இப்பாறை வரைவுகள் உள்ள இடங்களிலெல்லாம் புதிய கற்கால மனிதன் வாழ்ந்ததற்கான தடயங்களும் கிடைத்துள்ளன. ஆக இவையனைத்தும் தொல்பழங்கால மனிதனின் கால எல்லைக்குள் அடங்குகின்றன.

இந்தப் பின்னணியில் பெருமுக்கல் உருவங்களைப் பார்த்தோமானால் அவை தொல் பழங்கால மனிதனின் கால எல்லைக் கோட்டிற்குள் அடங்காது எனக் கருதலாம். அதற்குக் காரணமாக மூன்றினைத் தொகுத்துக் கூறலாம்.

*(1)* பெருமுக்கல் கீறல் உருவங்கள் எவையுமே விலங்குகளை வேட்டையாடுவதாகவோ தனித்த விலங்குகளாகவோ காட்டப்படவில்லை.

*(2)* தொல்பழங்காலச் சார்நிலை எச்சங்கள் (Associate finding) எவையும் இங்கே கிடைக்கவில்லை.

11. இரா. பவுன்துரை, தமிழகப் பாறை ஓவியங்கள், சேகர் பதிப்பகம், 1986, ப. 57-59.

12. H.D. Sankalia, **Pre History of India**, Munchiram Manoharlal Publishers Pvt. Ltd., 1977, p. 64.

அமர்ந்துள்ளமை இரண்டாம் நிலையாகவும் கொள்ளலாம். இதற்கும் முந்திய கால நிலை ஒன்று உண்டு. அதாவது வனவிலங்குகளுடன் விலங்குகளைப் போல் வாழ்ந்த காட்டுமிராண்டி நிலை கொண்ட தொல்பழங்கால மனிதனின் படைப்புகள். இந்த நிலை ஓவியங்கள் இந்தியாவில் அதிகம் காணப்படவில்லை.[11] ஓவியங்களுக்கு உள்ள இந்த அடிப்படையில்தான் பாறைப் பொறிப்புகளும் காணப் படுகின்றன. மிகப் பழமையான பாறைப் பொறிப்பு காஷ்மீரிலுள்ள பூர்ஜஹாம்[12] என்ற இடத்தில் கிடைத்துள்ளது. இவை தவிர பெல்காம் மாவட்டம் கொம்பிகுட்ட (Kombigudda) மலையிலும், மைசூர் மாநிலத்திலுள்ள சில்டதுர்க் என்ற இடத்திலும், பெல்லாரிக்கு அருகிலுள்ள குப்பகல்லு (Kuppagallu) என்ற இடத்திலும் கிடைத்துள்ளன. மேற்குறிப்பிட்ட இடங்களிலுள்ள உருவங்கள் அனைத்துமே விலங்குகள் மற்றும் விலங்குகளை வேட்டையாடும் மனித உருவங்களாகவே உள்ளன. மேலும் இப்பாறை வரைவுகள் உள்ள இடங்களிலெல்லாம் புதிய கற்கால மனிதன் வாழ்ந்ததற்கான தடயங்களும் கிடைத்துள்ளன. ஆக இவையனைத்தும் தொல்பழங்கால மனிதனின் கால எல்லைக்குள் அடங்குகின்றன.

இந்தப் பின்னணியில் பெருமுக்கல் உருவங்களைப் பார்த்தோமானால் அவை தொல் பழங்கால மனிதனின் கால எல்லைக் கோட்டிற்குள் அடங்காது எனக் கருதலாம். அதற்குக் காரணமாக மூன்றினைத் தொகுத்துக் கூறலாம்.

(1) பெருமுக்கல் கீறல் உருவங்கள் எவையுமே விலங்குகளை வேட்டையாடுவதாகவோ தனித்த விலங்குகளாகவோ காட்டப்படவில்லை.

(2) தொல்பழங்காலச் சார்நிலை எச்சங்கள் (Associate finding) எவையும் இங்கே கிடைக்கவில்லை.

11. இரா. பவுன்துரை, தமிழகப் பாறை ஓவியங்கள், சேகர் பதிப்பகம், 1986, ப. 57-59.

12. H.D. Sankalia, **Pre History of India_**, Munchiram Manoharlal Publishers Pvt. Ltd., 1977, p. 64.



(3) செதுக்கப்பட்ட உருவங்களின் சிற்ப அமைதி குறிப்பாக விலங்கின் மேல் உள்ள பல்லக்கும், நின்ற மனிதனின் இடையில் காட்டப்பட்டுள்ள X குறி போன்ற ஓர் அணியும் காலத்தால் பிற்பட்ட நிலையைத் தெளிவுறுத்துகிறது. இன்னும் இப்பாறை வரைவுகளின் செதுக்குத் திறனும் (அதாவது ஆழமாகச் செதுக்கப்பட்டுள்ள நிலை) கூட அதன் காலத்தைப் பின்னுக்குத் தள்ளுவதாகவே உள்ளன.

ஆக இரண்டாவது கால எல்லைக்குள்ளும் வராத காரணத்தால் மூன்றாவது காலகட்டத்தில் அதாவது வரலாற்றுக் காலத்தோடு இணைத்துப் பார்த்தோமானால் தெளிவு கிடைக்கிறது.

முன்னர் குறிப்பிட்டது போல இந்த வரைவுத் தொகுப்பில் "பொந்சரன்" என்ற வட்டெழுத்துக் கல்வெட்டு காணப்படுகிறது. இவ்வெழுத்துக்களின் செதுக்கு முறையும் உருவங்களின் செதுக்கு முறையும் ஒன்றாக இருப்பதால் இவை இரண்டையும் சமகாலமாகக் கருதலாம். அடுத்து சங்கப் புலவர் ஒருவர் "முக்கல் ஆசான்" என்று வழங்கப்படுகிறார். புலவரின் பெயருக்கு முன் உள்ள முக்கல் இவ்வூர் என்று கருதப்படுவதாலும், வரலாற்றுக் காலந் தொடங்கி நமக்குச் சான்றுகள் கிடைக்கின்றன என்ற நிலையிலும், கல்வெட்டின் எழுத்து வளர்ச்சி நிலையிலும் உருவங்களின் சிற்ப அமைதியாலும் பெருமுக்கல் உருவங்களை கி.பி.6-7 ஆம் நூற்றாண்டின் சமகாலமாகவோ அல்லது அதற்கு சற்று முன் பின்னாகவோ கருதலாம்.

(3) செதுக்கப்பட்ட உருவங்களின் சிற்ப அமைதி குறிப்பாக விலங்கின் மேல் உள்ள பல்லக்கும், நின்ற மனிதனின் இடையில் காட்டப்பட்டுள்ள X குறி போன்ற ஓர் அணியும் காலத்தால் பிற்பட்ட நிலையைத் தெளிவுறுத்துகிறது. இன்னும் இப்பாறை வரைவுகளின் செதுக்குத் திறனும் (அதாவது ஆழமாகச் செதுக்கப்பட்டுள்ள நிலை) கூட அதன் காலத்தைப் பின்னுக்குத் தள்ளுவதாகவே உள்ளன.

ஆக இரண்டாவது கால எல்லைக்குள்ளும் வராத காரணத்தால் மூன்றாவது காலகட்டத்தில் அதாவது வரலாற்றுக் காலத்தோடு இணைத்துப் பார்த்தோமானால் தெளிவு கிடைக்கிறது.

முன்னர் குறிப்பிட்டது போல இந்த வரைவுத் தொகுப்பில் "பொந்சரன்" என்ற வட்டெழுத்துக் கல்வெட்டு காணப்படுகிறது. இவ்வெழுத்துக்களின் செதுக்கு முறையும் உருவங்களின் செதுக்கு முறையும் ஒன்றா. இருப்பதால் இவை இரண்டையும் சமகாலமாகக் கருதலாம். அடுத்து சங்கப் புலவர் ஒருவர் "முக்கல் ஆசான்" என்று வழங்கப்படுகிறார். புலவரின் பெயருக்கு முன் உள்ள முக்கல் இவ்வூர் என்று கருதப்படுவதாலும், வரலாற்றுக் காலந் தொடங்கி நமக்குச் சான்றுகள் கிடைக்கின்றன என்ற நிலையிலும், கல்வெட்டின் எழுத்து வளர்ச்சி நிலையிலும் உருவங்களின் சிற்ப அமைதியாலும் பெருமுக்கல் உருவங்களை கி.பி.6-7 ஆம் நூற்றாண்டின் சமகாலமாகவோ அல்லது அதற்கு சற்று முன் பின்னாகவோ கருதலாம்.



# 11. சங்க கால வேளிர்

வ.குருநாதன், தஞ்சாவூர்

## தமிழக வேளிர்

தமிழக வரலாற்றில் சங்க காலத்தில் சேர, பாண்டிய, சோழர்களென்ற முடியுடை மூவேந்தர்களை அடுத்த நிலையில் மொழியப் பெறுகின்ற சிறப்பிற்குரியோர் வேளிர்களாவர்.

"பணைகெழு வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து" (பதிற்று. 30)
"வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து" (பதிற்று. 49)
"வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய" (பதிற்று .88)
"பதினொரு வேளிரோடு வேந்தர் சாய" (அகம். 246)
'இருபெரு வேந்தரொடு வேளிர் சாய" (மதுரைக்.55)

என்றெல்லாம் சங்க இலக்கியங்களில் வேந்தரோடே வேளிர் உடன்படுத்திக் கூறப்பெறல் காண்கிறோம்.

வேளிர் மிகவும் தொன்மை வாய்ந்த குடிமரபினர். 'தொன்முதிர் வேளிர்' (அகம். 258) எனவும், 'தொன்று முதிர் வேளிர்' (நற்.280) எனவும் கூறப்படுகின்ற இவருடைய குடிமரபின் தொன்மையை "நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிர்" (புறம். 201) என்ற தொடர் மேலும் உறுதிப் படுத்துகின்றது.

"பதினொரு வேளிர்" (அகம். 246) " ஈரெழு வேளிர்" (அகம் 135) என வருகின்ற எண்ணுத் தொடர்களால் பண்டைத் தமிழகத்தே பல்கியிருந்த வேளிர் குடிமகளின் பன்மையும் விளங்கும்.

## வரலாற்று மரபு

இவ்வேளிருடைய வழிமுறை வரலாறு குறித்துக் காண்கையில் வேளிர் குடிவழிகளுள் ஒருவழிவந்த இருங்கோ வேளைப் பாடிய கபிலரின் புறப்பாடல் (புறம். 201) ஒன்றினால் அவன் முன்னோனான குடிமுதல்வன் வடபால் முனிவனொரு வனின் தடவினுள் தோன்றியவனென்பதும், அம் முதல்வனும் அவன் மரபினரும் துவரையென்னும் நகரையாண்டவரென்பதும்

அவன் மரபிலே நாற்பத்தொன்பதாம் தலைமுறையினனே இருங்கோவேளென்பதும் விளங்குகின்றன. சங்க இலக்கியங்களுள் வேளிர் வரலாற்று மரபு குறித்து இவ்வொரு சான்றே காணப்படுகின்றது.

வந்தேறிய வடவரா ?

தொல்காப்பியத்திற்கு உரை வரைந்த நச்சினார்க்கினியரின் சிறப்புப் பாயிரவுரையும் மற்றொரு நூற்பாவுரையும் (பொருள். 32) இவ்வேளிர் பலருடைய வரலாற்றையும் பொதுவாக வேறொரு முறையில் குறித்துக் காட்டுகின்றது.

> "தேவரெல்லாம் கூடி, 'யாம் சேரவிருத்தலின் மேருத்தாழ்ந்து தென்திசை உயர்ந்தது; இதற்கு அகத்தியனாரே ஆண்டிருத்தற்குரியவர்' என்று அவரை வேண்டிக் கொள்ள, அவரும் தென்திசைக்கண் போதுகின்றவர்......... துவராப்பதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிர் உள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டு போந்து, காடு கெடுத்து நாடாக்கி,..... பொதியிலின்கண் இருந்தனர்" (தொல். சிறப்புப் பாயிரவுரை).

> "இது மலையமாதவன் நிலங்கடந்த நெடு முடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும் வேந்தன் தொழில் உரித்தென்கின்றது" (தொல்.பொருள்.நூ. 32 உரை)

என்பன வேளிர் வரலாறு குறித்த நச்சினார்க்கினியரின் உரைப் பகுதிகளாம்.

இச்சான்றுகளைக் கொண்டு, 'வேளிர் வரலாறு' கண்ட மு. இராகவையங்கார் தமிழகத்து வேளிரெல்லாரும் வடநாட்டுத் துவாரகையிலிருந்து வந்தேறிய குடியினரென்றும், அவரெல்லாம் நிலங்கடந்த நெடுமுடியண்ணலான கண்ணனின் வழியின ரென்றும், யாதவரென்றும் பலமுடிபுகளைப் புலப்படுத்துகின்றார். (வே.வ.பக். 25-26)

பொருந்தாத புனைந்துரை

இராகவையங்காரின் ஆராய்ச்சி மிக நுண்ணிதே. ஆயினும், அது தமிழக வேளிர் அனைவருடைய வரலாற்றிற்கும்



ஒப்பமுடிந்த ஆராய்ச்சியாகுமா என்பது ஐயத்திற்குரியதே. காரணம் நச்சினார்க்கினியர் காட்டுகின்ற அகத்தியர் வரலாறு முற்றும் நம்பத்தக்கதாயில்லை யென்பதை அவ்வுரைப் பகுதியை ஒருமுறை கற்போரும் உணர்வர். அகத்தியர் தென்திசைக்குப் புறப்பட்டு வருபவர் கங்கையாரிடம் சென்று காவிரியாரை வாங்கிக் கொண்டும், யமதக்கினியாரிடம் சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரென்ற தொல்காப்பியரை வாங்கிக் கொண்டும், புலத்தியனாரிடம் சென்று அவருடன் பிறந்தாளான உலோபாமுத்திரையாரை மணந்து அங்கேயே இருத்தியும் வந்த வரலாற்றின் இடையேதான் துவராபதியிலிருந்து திருமால் வழியினரான அரசர், வேளிர், அருவாளர்களையும் கொண்டு வந்தாராகக் கூறுகின்றார் நச்சினார்க்கினியர். பின்னும் அவர் அகத்தியனாரும் திரணதூமாக்கினியாரென்ற தொல்காப்பியரும் உலோபாமுத்திரையின் காரணத்தால் மதிநுட்பமின்றி மாறிமாறிச் சபித்துக் கொண்டாராக அருவருக்கத்தக்கதொரு கதையையும் புனைந்துரைப்பார். தென்தமிழ் நாட்டவரான தொல்காப்பியரை வடநாட்டுத் திரணதூமாக்கினியாரென்றும் யமதக்கினிக்கு மைந்தரென்றும் (பரசுராமருக்கு உடன்பிறந்தாரென்றும்) கூறுகின்ற இப்புனைகதை போன்றதே, தமிழகத்து வேளிரைத் துவாரகையிலிருந்து கொண்டுவரப்பட்டாராகக் கூறுவதுமாம். இந்தப் புனைகதைக்கு ஏற்புடைய சான்றுகளையெல்லாம் திரட்டி 'வேளிர் வரலாறு' கண்டது இராகவையங்காரின் அருமுயற்சியே யாயினும் அஃது ஐயத்தின்பாற்பட்டே அமைந்துள்ளது.

இனி, இருங்கோவேளின் குடிவழிபற்றிக் கூறிய கபிலரின் பாடற்பகுதி கொண்டு தமிழகத்து வேளிர் அனைவருக்கும் பொதுவரலாறு காண்பதுவும் பொருந்தாதாம். இராகவையங்காரின் கருத்துப்படி வடபால் முனிவனின் தடவினுள் தோன்றியதும் துவரையென்னும் நகரையாண்டதும் வேளிர் அனைவருடைய முன்னோருக்கும் பொதுவாயினும் நாற்பத்தொன்பது வழிமுறை (தலைமுறை) வருதல் எல்லோருக்கும் ஒத்ததென்பது ஒவ்வாது. இருங்கோவேள் தன்குடியில் நாற்பத்தொன்பதாவது தலைமுறையினனென்றால் அவனையொத்த

வேளிர் அனைவருமே அவரவர் குடிகளுள் அதே நாற்பத் தொன்பதாவது தலைமுறையினராக இருத்தலென்பது இயலாதன்றோ!

## பதினெண் குடிகளா?

இனி, இவ்வேளிர் குடிகள் பதினெட்டெனக் கொண்டு பதினெண்குடி வேளிரெனத் தொகையிட்டுக் குறிக்குமொரு வழக்கையும் காண்கிறோம். ஆயின், சங்க இலக்கியங்களில் எங்கும் இத்தொகைக் குறிப்புத் தோன்றவில்லை. மேற்கண்ட நச்சினார்க் கினியருரையிலேயே காணப்படுகிறது. வேளிர் அனைவரையும் கண்ணன் வழியினரெனக் கொண்ட கருத்திற்கேற்ப, அக்கண்ணன் குலத்தோரான யாதவர் பதினெண்குடியினராகலின் வேளிரும் பதினெண்குடியினரென்ற ஒப்பீட்டுப் புனைந்துரை உருவாயிற்று என்னலாம். அம்முறையில் தமிழக வேளிர் குடிகளைப் பதினெட்டாக எண்ணிக் காண்பதற்கு எத்துணையும் இசைவில்லை.

சங்க இலக்கியங்களில், 'பதினொரு வேளிர்' (அகம். 246) 'ஈரெழு வேளிர்' (அகம். 135) என்று ஈரிடங்களில் மட்டுமே இவர்கள் எண்ணிடப் பெறுகின்றனர். எனினும் அவ்விடங்களில் அவ்வெண்ணிக்கை வேளிர் குடிகளின் முற்றெண்ணிக்கையாக மொழியப் பெறவில்லையென்பதும் காணத்தகும்.

## சங்க கால வேளிர்

சங்க காலத் தமிழகத்தில் ஆட்சிபுரிந்த வேளிர்களாய் அறியவருவோர் இருபதின்மர். ஆட்சியிடங்களை அறிந்த அளவில் அவர்களுள் சேரநாட்டு வேளிர் எழுவர்; பாண்டிய நாட்டு வேளிர் நால்வர்; சோழநாட்டு வேளிர் ஒன்பதின்மர். இந்த அடைவிலே அவர்களையும் அவர்களின் ஆட்சியிடங்கள் வரலாறுகளையும் கட்டுரையளவுக்குச் சுருக்கமாகக் காணலாம்.

## சேரநாட்டு வேளிர்

சேரநாட்டு வேளிர் எழுவரையும் அவர்களின் ஆட்சியிடங்களைத் தெற்கு வடக்காகக் கண்டு : 1. நெடுவேளாவி, 2.



வேளாவிக்கோமான் பதுமன், 3. வையாவிக்கோப் பெரும் பேகன, 4. நன்னன் வேண்மான், 5. வெளியன் வேண்மான் ஆய் எயினன், 6. வெளிமான், 7. எருமையூரன் என வரிசைப் படுத்தலாம்.

## ஆவியர் மூவர்

அவருள் நெடுவேளாவி, வேளாவிக்கோப் பதுமன், வையாவிக்கோப் பெரும்பேகன் ஆகிய வேளிர் மூவரும் ஆவியர் குடியினர். இக்காலப் பழநி மலையாகிய பொதினிமலையும் அதனைச் சூழ்ந்த நாடும் பண்டைக் காலத்தே இவர்களின் ஆளுகைக்குள் அமைந்திருந்தன. வேள்மரபைச் சார்ந்த ஆவிக்கோ வேளாவிக்கோ; ஆவியர்க்குரிய நன்குடி ஆவிநன்குடி; அதுவே இன்றைய திருவாவிநன்குடி.

வேளாவியர் குடியுள் இன்று அறியப்படுமளவில் முதல்வனாக வருகின்ற நெடுவேளாவி தனக்குரிய பொதினி மலையோடே சார்த்தப்பெற்று அகப்பாடல்கள் இரண்டிலே (அகம். 1, 61) மாமூலனாரால் பாடப்பெற்றுள்ளான். அவற்றுள் முதற்பாடலால், இவன் முருகனையொத்த நல்ல போராற்றல் வாய்க்கப் பெற்றவனென்றும் ஏனையோரால் அஞ்சத் தக்க குதிரைப்படையுடைய மழவரைப் போரிலே வென்றோட்டியவ னென்றும் அறிகிறோம்.

நெடுவேளாவிக்குப் பின்னோனாய் அறிய வருபவன் வேளாவிக்கோமான் பதுமன். இவன் மகளிர் இருவருள் ஒருத்தியை இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனும் மற்றொருத் தியைச் செல்வக்கடுங்கோ வாழியாதனும் மணந்து மக்களைப் பெற்றனராகப் பதிற்றுப்பத்தின் பதிகங்கள் (4, 6, 8) பகர்கின்றன. ஆதலால் இவனை அவ்விருபெருஞ் சேரவேந்தர்க்கும் மாமனென்று மதிக்கலாம். வஞ்சிமாநகர்ப் புறத்தே வேளாவிக்கோ மாளிகையென்று இவன் பெயரோடே விருந்தினர் மாளிகையொன்று இருந்ததாகவும் சேரன் செங்குட்டுவன் இமையப் படையெடுப்பிலே வென்று, கல்சுமத்திக் கொண்டு வந்த கனகவிசயரை இந்த மாளிகையில் தங்கவைத்தானென்றும் சிலப்பதிகாரத்தால் (28: 195-198) அறிகிறோம். புறநானூற்றுப்

பாடலொன்றின் (13) கீழே வேண்மாடமெனக் குறிக்கப் பெற்றுக் காணப்படுவதும் இதுவேயெனலாம்.

வேளாவிக்கோப் பதுமனுக்குப் பின் வள்ளலெழுவருள் ஒருவனாய் வருபவன் வையாவிக்கோப் பெரும்பேகன். பரணர் (புறம். 141, 142, 144, 145) கபிலர் (புறம். 143), அரிசில் கிழார் (புறம். 146) பெருங்குன்றூர்கிழார் (புறம். 147) பெருஞ்சித்திரனார் (புறம். 158) இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 84-87) ஆகிய புலவர் பலராலும் பாடப்பெற்ற சிறப்புக்குரியோன் இவன். ஆயினும், அப்பாடல்களில் இவன் மயிலுக்குப் போர்வையளித்தது முதலான வண்மைச் செயல்களும் மனைவியாகிய கண்ணகியைத் துறந்து மற்றொருத்தியோடு முல்லைவேலி நல்லூரில் தங்கி யிருந்தது போலும் வாழ்க்கைச் செயல்களும் தவிர, இவனுடைய அரசியல் வரலாற்றுச் செய்திகளாக எவையும் அறியவரவில்லை.

நன்னன் வேண்மான்

சேரநாட்டு வேளிருள் அடுத்து வருகின்ற நன்னன் வேண்மான், மேல் கடற் கரையதாகிய வியலூரில் இருந்தாண்டவன். இவன் வண்மையையும் இவனுடைய வியலூர் வளத்தையும் மாமூலனாரின் அகப்பாடலொன்றினால் (அகம். 97) நன்கறியலாம். வயலை வேலி வியலூரென்று கடற்கரைச் சார்பு விளங்க அவரால் புனையப் பெறுகின்ற இவனூரை அதேமுறையில் 'சிறுகுரல் நெய்தல் வியலூர்' எனப் பதிற்றுப் பத்தின் பதிகமும் (5), சிலப்பதிகாரமும் (28:115) பாடுகின்றன. மிளகுக் கொடிகள் வளர்ந்த மலைப்பக்கத்தே துயிலும் யானை களையுடையதும் நெய்தற்பூக்களையுடையதுமான வியலூர் என்ற சிலப்பதிகார (28:114-115) விளக்கத்தினால் இவ்வூரின் மலைச் சார்போடே கூடிய கடற்கரைச் சார்பு விளங்கும். இவ்வூர், சேரன் செங்குட்டுவனால் அழிக்கப்பட்டதாகப் பதிற்றுப்பத்தின் பதிகத்தினால் அறிய வருதலால், இவ்வியலூர் வேண்மான் நன்னன் சேரர்க்குப் பகைவனென்பதும் புலனாம். ஆகவே, சேரவேந்தருள் செங்குட்டுவனுக்குத் தமையனான களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கும் பகைவனாய், அவனொடு



தொடர்ந்து போருடற்றி முடிவிலே அவனால் அழிக்கப் பட்டவனாகப் பதிற்றுப்பத்தினால் (பா.40 பதி. 4) அறியவரும் கடம்பின் பெருவாயில் நன்னனே இந் நன்னன் வேண்மா னென்றும் காணலாம்.

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் தனக்குப் பழைய மரபிலே உரிமைச் சிறப்புடையதாய், இடையிலே நன்னனால் கவர்ந்து கொள்ளப்பட்டிருந்த பூழி நாட்டின் மேல் படையெடுத்து அதனை முதலில் மீட்டுக் கொண்டு, தொடர்ந்து நன்னனின் நிலைத்த போராற்றலை அழித்து (கொன்று) இவனது காவல்மரமான வாகையையும் அடியோடே வெட்டினானென்பது பதிற்றுப்பத்து பகரும் செய்தியாகும். நன்னனின் இவ் வாகைமரம் இருந்த இடம் வாகைப் பெருந்துறையென்பதும், அது நார்முடிச் சேரலின் நாட்டிற்கு மேற்கேயிருந்ததென்பதும் அங்கேதான் நன்னன் இறுதிப்போர் இயற்றி மடிந்தானென்பதும் அப்போரில் இவனைக் கொன்று வெற்றி பெற்ற நார்முடிச் சேரல் முன்னர் இவனிடத்தே தான் இழந்திருந்த நாடொன்றை மீட்டுக் கொண்டானென்பதும் கல்லாடனாரின் அகப்பாட லொன்றினாலும் (அகம். 199) அறிய வருகின்றது. கடம்பின் பெருவாயிலென்பது இவனுக்குரிய மற்றோர் ஊராகலாம்.

வெளியன் வேண்மான் ஆய் எயினன்

'வானவரம்பன் வெளியம்' (அகம். 309) எனச் சேரமானுக் குரியதாக வெளியமென்பதோர் ஊரை மாமூலனாரின் பாடலொன்றில் அறிகிறோம். இந்த வெளியமென்னும் ஊரையாண்ட வேண்மானே வெளியன் வேண்மானென்று உணரலாம்.

இனி, வெளியன் வேண்மாள் நல்லினியென்பவளை உதியஞ்சேரலின் மனைவியாகவும் இமையவரம்பன் நெடுஞ்சேர லாதனுக்குத் தாயாகவும் காண்கிறோம். (பதிற்று.பதி.2)'வேள்மகன்' என்ற சொல் வேண்மானென வருதல் போல, 'வேள்மகள்' என்ற சொல் வேண்மாளென வந்துள்ளது. ஆதலின், அந்த நல்லினியென்பாள் இந்த வெளியன்வேள் குடிப்பிறந்த

பெண்ணென்பது புலனாம். ஆகவே, சேரமரபினர் மகட்கொடை நேரும் மாண்பமைந்த குடியாக இவ்வெளியன் வேள்குடியை எண்ணலாம்.

வானவரம்பன் வெளியமெனச். சேரனுக்கு உரிமை யுடையதாகக் கூறப்படுவதனால் இவ்வூரைச் சேரநாட்டுப் பேரெல்லைக்குட் பட்டதாகவும், 'வெளியத்தன்ன நம் மாணலம்' எனத் தலைவியின் பெண்மைப் பொலிவிற்கு உவமையாகக் கூறப்படுவதனால், இவ்வூர் அக்காலத்தே செல்வச் செழிப்போடு சிறந்து திகழ்ந்ததாகவும் கருதலாம். சேரநாட்டுப் பேரெல்லைக் குட்பட்ட இவ்வெளியம் அந்நாட்டின் வடபால் அமைந் திருந்தமை, பின்வரும் ஆய் எயினன் வரலாற்றினால் தெளிவாகும்.

வெளியன் வேண்மான் ஆய் எயினன் பரணராலும் (அகம். 142, 148, 181, 208, 396) படைமங்க மன்னியாராலும் (புறம். 351) பாடப் பெற்றவன். இவனுக்கே அதிகனென்ற பெயரும் பரணர் பாடலால் (அகம். 142) அறிய வருகின்றது. இவன் சிறந்த வண்மையாளன் (அகம். 208). தன்னைப் பாடும் பாணர்க் கேயன்றிப் பாடாத பறவைகளுக்கும் பாதுகாவலனாய் அவற்றை வளர்த்து வந்தவன் (அகம்.142).

இந்த ஆய் எயினன் காலத்தில் கொண்கான நாட்டினை ஏழில் மலை சார்ந்த பாழிக்கோட்டையிலிருந்து ஆண்ட பாரத்துத் தலைவன் நன்னன் புன்னாட்டின் மீது படையெடுத்தான் (அகம். 396), நன்னனுக்கு நண்பனாயும் அவனது நகரமான பாரத்தைக் காக்கும் பாதுகாவலனாயும் விளங்கிய மிஞிலியென்பவனே (நற். 265) இப் படையெடுப்பிற்குத் தலைவனாய் எழுந்தான். அதனையறிந்த நிலையில் அவனையெதிர்க்கும் ஆற்றலின்றி அஞ்சிய புன்னாட்டு மன்னனுக்கு ஆருயிர் நண்பனென்ற முறையில், அவனை அஞ்சேலென்று அமர்த்திய ஆய் எயினன், வெள்ளம் போலும் தன்படையுடனே (அகம்.142) சென்று பாழியையடுத்த பறந்தலையில் வெளியிடத்தில் (அகம். 208) தானே முன்னின்று மிஞிலியைத் தாக்கினான் (அகம்.396) மிஞிலியும் அரண்கள் பலவற்றை அழித்து வென்ற பெரும்படையோடே



எயினனை எதிர்த்தான். (அகம். 181) ன் மிகக் கடுமையாக நடந்த அப்போரினிடையே மிஞிலியின் வாள்வாய்ப்பட்டு எயினன் வீழ்ந்தானாக, அவனது உடலின் மேல் வெயில் படாதவாறு, அவனால் முன்னர்க் காக்கப்பட்ட பறவைகளெல்லாம் கூடித் தம் இறகுகளைக் கோலி நிழலிட்டு வருந்தின. அந்நிலையில் பகைமறந்து இவனை அருளிக் காணவேண்டிய நன்னன், இவனிடத்து வைத்த பகையும் சினமும் மாறாதவனாய் இவனைக் காணாதே மறைந்திருந்தான். இவன் வீழ்ச்சியையறிந்து இவனுடைய உரிமை மகளிர் பலரும் போர்க்களம் வந்து பெருந்துயருற்றுத் தம் மாலைகளைப் பிய்த்தெறிந்து புலம்பினராக, அப்பூசல் கண்ட அகுதையென்பான் அவர்களை ஆற்றித் துயர்களைந்தான் (அகம். 208) என்று அறிகிறோம்.

இவ்வாறு, அஞ்சலென்று தானுரைத்த அபய மொழிக் காகத் தன்னுயிரையே கொடுத்த உயர்ந்தோனாக இவ் வெளியன் வேண்மான் ஆய் எயினனின் வரலாற்றைப் பரணர் பாடல்கள் பலவும் பறைசாற்றுகின்றன.

வெளிமான்

வெளிமான், இளவெளிமான் என்ற உடன்பிறப்பாளர் இருவர் புறநானூற்றில் பெருஞ்சித்திரனாரால் முறையே புகழ்ந்தும் இகழ்ந்தும் பாடப்பெற்றுள்ளனர். (புறம். 162, 237-238) இந்த வெளிமானுடைய ஊர் எதுவென்று தெளிவுறத் தெரியவில்லை. வெளிமான் என்ற பெயரிலுள்ள மானென்னும் விகுதி மன்னனென்று பொருள் படுவதாகலின் வெளியென்னும் பகுதி ஊரைக் குறித்ததாகலாம். ஆயின், வெளியெனப் பெயர்பெற்ற ஊரும் சங்க இலக்கியங்களில் விளங்கவில்லை. மற்று, வெளியமென்ற ஊரையும் அதனடியாய் வெளியன் வேண்மான் ஆய் எயினன், வெளியன் வேண்மாள் நல்லினி என்ற பெயர்களையும் மேலே கண்டோம். ஆதலால் அவ்வெளியமென்ற ஊர்ப்பெயரே விகுதி கெட்டு வெளியென்ற மட்டில் நின்று வெளிமானென்னும் பெயர்க்குப் பகுதியாயிருத்தலும் கூடும். இஃது ஆய்விற்குரியது.

வெளிமான் சங்ககாலத்திலேயே கடையெழு வள்ளல்களுக்குப் பிற்பட்டுக் குமணன் காலத்தில் கோலோச்சியிருந்தவன். குமணனைப் பாடிய பெருஞ்சித்திரனாரே இவனையும் பாடியுள்ளமையால் இது விளங்கும்.

வெளிமானுடைய அரசியல் வரலாறாக எதனையும் அறிய இயலவில்லை.

எருமையூரன்

தமிழகத்துப் படைகள் தலைமயங்கிப் பொருத தலையாலங்கானத்துப் போரிலே, பாண்டியன் நெடுஞ்செழியனால் இருபெருவேந்தரோடு ஒருசேரக் கொன்றொழிக்கப் பட்ட ஐம்பெரு வேளிருள் ஒருவனாய் அறிய வருபவன் எருமையூரன் (அகம். 36). இவனை, 'நாரறி நறவின் எருமையூரன்' என்ற மட்டில் அங்கே குறிப்பிட்டு அறிவிக்கும் நக்கீரர் தாமே பிறிதோர் அகப்பாடலில், 'நேரா வன் தோள் வடுகர் பெருமகன், பேரிசை எருமை நன்னாட்டுள்ளதை அயிரியாறு" (அகம். 253) என்று இவனையும் இவனாட்டில் ஓடுகின்ற ஆற்றையும் குறித்துப் பாடுவார். இதில் இவன் பெயர் 'எருமை' என்று மட்டும் வந்துள்ளது: 'எருமை நன்னாடு' என்று இவன் பெயரால் அமைந்த நாடு குடநாடாமென்பதை, 'நுண்பூண் எருமைக் குடநாடு' (அகம். 115) எனவரும் மாமூலனாரின் மற்றோர் அகப்பாடலால் அறியலாம். குடநாடு சேரநாட்டின் வடபால் அமைந்தது. அஃது எருமையென்ற இவன் பெயரால் தானும் எருமை நாடாகிப் பிற்காலத்தே கருநாடகமாயிற்று எனக் காணலாம்.



# 12. பல்லவர் கால ஆனாங்கூர்

கோ. முத்துசாமி, சென்னை

விழுப்புரத்திலிருந்து பின்னத்தூருக்குச் செல்லும் சாலையில் தென்கிழக்கே 6 கி.மீ தொலைவில் ஆனாங்கூர் அமைந்துள்ளது. கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த பல்லவ மன்னன் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலம் தொட்டு ஆனாங்கூர் என்னும் இவ்வூர் மிகவும் சிறப்பு வாய்ந்ததாக இருந்தமை இவ்வூர் வாய்க்கால் கரையின் அருகில் உள்ள பலகைக் கல்லில் கிடைத்த நந்தி போத்தரையனின் 12 ஆவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டு மூலம் அறியலாம். அதில் இவ்வூர் இறைவனின் பெயர் "மகாதேவர்" என்றும், ஊரின் பெயர் 'ஆனாங்கூர்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே, இவ்வூரில் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலத்திலேயே ஒரு சிவன் கோயில் இருந்தமையும் ஏதோ காரணத்தால் அப்பல்லவர் காலக் கோயில் அழிந்து விட்டதையும் உணர முடிகிறது.

அகத்தீசுவரர் கோயில்

தற்போது இடிந்த நிலையில் காணப்படும் அகத்தீசுவரர் கோயில், சோழ மன்னன் முதலாம் குலோத்துங்கனால் கட்டப்பட்டிருத்தல் வேண்டும். கோயிலில் கிடைக்கும் கல்வெட்டில் பழமையானது இம்மன்னனுடையதே ஆகும். எனவே இடியுண்ட பல்லவர் காலக் கோயில் இம்மன்னன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டிருத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது. சோழர் காலக் கல்வெட்டில் இவ்வூர் இறைவன் பெயர் "ஆனாங்கூர் உடையார்" என்று உள்ளது. ஆனாங்கூர், பனையூர் நாட்டில் அடங்கிய ஒரு ஊர் என்பது மற்றொரு கல்வெட்டால் அறியலாம். ஆனால் தற்போது வழங்கப்படும் அகத்தீசுவரர் என்ற பெயர் எப்போது ஏற்பட்டது என்பதற்குச் சரியான ஆதாரம் கிடைக்கவில்லை.

## முருகன் பவனிக் காட்சி

கோயிலுக்கு வடக்கில் 50 மீட்டர் தூரத்தில் தனிப் பலகைக் கல்லில் 6-7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த முருகன் சிற்பம் யானை மீது அமர்ந்து பவனி வரும் நிலையில் வடிக்கப்பட்டுள்ளது. தலையில் ஜடா மகுடமும் வலது முன் கை யானைமீது வைத்தும் வலது பின் கையில் அங்குசமும் இடது முன் கை இடுப்பிலும் இடது பின்கை அக்க மாலையுடனும் வயிற்றில் உதர பந்தமும் மார்பில் தடித்த நூலுடன் காணப்படுகின்றன. யானையின் காதுகள் அகன்றும் வலது தந்தம் ஒடிந்தும், இடது தந்தம் நன்றாகவும் உள்ளது. துதிக்கையின் நுனியில் கரும்பு ஒன்றைப் பிடித்துள்ளது. தோற்றத்தில் இது இந்திரன் போலக் காணப் படினும் முருகன் சிற்பம் என்றே கூறலாம்.

## தாய்மார் எழுவர் சிற்பங்கள்

முருகன் சிற்பத்தின் கிழக்கே 50 மீட்டர் தொலைவில் ஒரு பலகைக் கல்லில் தாய்மார் எழுவர் சிற்பம் வடிக்கப்பட்டு வழிபாட்டில் உள்ளது. எழுவரில் ஐவரின் உருவங்கள் தான் உள்ளன. இச்சிற்பமும் ஒவ்வொன்றும் இடது காலைத் தொங்க விட்டு வலது காலை மடித்து அமர்ந்து தமக்குரிய ஆயுதங்களுடன் உள்ளன.

## கஜலட்சுமி

தாய்மார் எழுவரின் சிற்பத்தின் அருகில் தாமரைப் பீடத்தின் மீது அமர்ந்த நிலையில் இரு கைகளிலும் மலர் ஏந்திய நிலையில் கஜலட்சுமி உள்ளது. தேவியின் வலப்புறம் யானை ஒன்று சாமரம் வீசுகிறது. இடது பக்கம் ஒரு யானை தேவிக்கு வெண் கொற்றக் குடை பிடித்துள்ளது. தாமரைப் பீடத்தின் அடியில் வலப்பக்கத்தில் ஒரு குள்ள பூதம் மலர்க்கூடை ஏந்தி நிற்கிறது. இடது பக்கத்தில் மற்றொரு பூதகணம் பழக்கூடையை ஏந்தி நிற்கிறது. இச்சிற்பமும் பல்லவர் கலைத் திறனுக்கோர் சிறந்த எடுத்துக்காட்டாகும்.



## சண்டேசுவரர் சிற்பம்

அகத்தீசுவரர் கோயிலின் முன்பாக உள்ள சந்நிதியில் சண்டேசுவரரின் சிற்பம் காணப்படுகிறது. வலது காலை மடித்து இடது காலை ஊன்றிய நிலையில் அமர்ந்துள்ளார். வலது கையில் கதையும் இடது கையை இடுப்பிலும் வைத்துள்ளார். தலையில் ஜடா பாரமும் காதுகளில் குண்டலமும் இடையில் குறுவாளும் காணப்படுகின்றன. கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் இச்சண்டேசுவரர் சிற்பமும் பழமையானதே.

## மகிஷாசுர மர்த்தினி

ஆனாங்கூரின் பெரிய ஏரிக் கரையில், இரயில் பாதையையொட்டி ஸ்ரீ மகாமாரியம்மன் என்ற பெயரில் சிறு கோயில் தற்காலத்தில் கட்டி அதனுள் வழிபாட்டில், இத்தேவியை அமைத்து வழிபடுகின்றனர். எட்டுக் கைகளுடன் காணப்படும் தேவி எருமைத் தலையின் மீது கம்பீரமாக நிற்கிறாள். காலுக்குக் கீழே இடப்பக்கம் கொற்றவைக்கு பயந்து சாய்ந்த நிலையில் (மகிஷன்) அரக்கனின் உருவம் காணப்படுகிறது. தேவியின் வலது நான்கு கைகளில் முறையே சக்கரம், அம்பு, வாள், வரதமாகவும் இடது பக்கம் முறையே சங்கு, வில், கேடயம் இடுப்பில் வைத்த நிலையிலும் காணப்படுகிறது. தலையில் ஜடா மகுடம் சிறப்பாக உள்ளது.

## திருமாலின் நின்ற கோலம்

மகிஷாசுர மர்த்தினியின் அருகில், திருமால் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். இச்சிற்பமும் தனிக் கல்லில் அழகாக வடிக்கப் பட்டுள்ளது. தலையில் கிரீட மகுடமும் வலது இரண்டு கைகளில் சக்கரமும் அபயமும் காட்டப்பட்டுள்ளன. இடது பக்க முன் கையில் சங்கும் பின் கை தொடையில் ஊன்றிய நிலையிலும் காணப்படுகிறார்.

விழுப்புரம் மாவட்டத்தில் அமைந்துள்ள இவ்வூரும் பல்லவர் காலத்தில் மிகவும் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியமை கல்வெட்டாலும், கிடைக்கின்ற சிற்பங்களின் கலை அழகாலும்

## சண்டேசுவரர் சிற்பம்

அகத்தீசுவரர் கோயிலின் முன்பாக உள்ள சந்நிதியில் சண்டேசுவரரின் சிற்பம் காணப்படுகிறது. வலது காலை மடித்து இடது காலை ஊன்றிய நிலையில் அமர்ந்துள்ளார். வலது கையில் கதையும் இடது கையை இடுப்பிலும் வைத்துள்ளார். தலையில் ஜடா பாரமும் காதுகளில் குண்டலமும் இடையில் குறுவாளும் காணப்படுகின்றன. கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் இச்சண்டேசுவரர் சிற்பமும் பழமையானதே.

## மகிஷாசுர மர்த்தினி

ஆனாங்கூரின் பெரிய ஏரிக் கரையில், இரயில் பாதையையொட்டி ஸ்ரீ மகாமாரியம்மன் என்ற பெயரில் சிறு கோயில் தற்காலத்தில் கட்டி அதனுள் வழிபாட்டில், இத்தேவியை அமைத்து வழிபடுகின்றனர். எட்டுக் கைகளுடன் காணப்படும் தேவி எருமைத் தலையின் மீது கம்பீரமாக நிற்கிறாள். காலுக்குக் கீழே இடப்பக்கம் கொற்றவைக்கு பயந்து சாய்ந்த நிலையில் (மகிஷன்) அரக்கனின் உருவம் காணப்படுகிறது. தேவியின் வலது நான்கு கைகளில் முறையே சக்கரம், அம்பு, வாள், வரதமாகவும் இடது பக்கம் முறையே சங்கு, வில், கேடயம் இடுப்பில் வைத்த நிலையிலும் காணப்படுகிறது. தலையில் ஜடா மகுடம் சிறப்பாக உள்ளது.

## திருமாலின் நின்ற கோலம்

மகிஷாசுர மர்த்தினியின் அருகில், திருமால் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். இச்சிற்பமும் தனிக் கல்லில் அழகாக வடிக்கப் பட்டுள்ளது. தலையில் கிரீட மகுடமும் வலது இரண்டு கைகளில் சக்கரமும் அபயமும் காட்டப்பட்டுள்ளன. இடது பக்க முன் கையில் சங்கும் பின் கை தொடையில் ஊன்றிய நிலையிலும் காணப்படுகிறார்.

விழுப்புரம் மாவட்டத்தில் அமைந்துள்ள இவ்வூரும் பல்லவர் காலத்தில் மிகவும் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியமை கல்வெட்டாலும், கிடைக்கின்ற சிற்பங்களின் கலை அழகாலும்



பெருமையை நிலை நாட்டுகின்றன. பல்லவர்களுக்குப் பின் சற்றுப் பொலிவிழந்த இவ்வூரை சோழர்கள் காலத்தில் மீண்டும் சிறப்புறச் செய்து கோயிலை புதுப்பித்துக் கட்டி உள்ளனர். ஆனால் பிற்காலத்தில் கோயில் மீண்டும் இடிபட்டுப் போயிற்று. எனினும் தொன்மை வரலாற்றிலும் பல்லவர் கலைப் பாணியிலும் என்றும் அழியா இடத்தை ஆனாங்கூர் பிடித்து விட்டது என்றே கூறலாம் கீழ்காணும் கல்வெட்டு இக்கட்டுரையுடன் தொடர்புடையதாகும்.

இடம் : ஆனாங்கூர் கரும்படி வாய்க்கால

காலம் : நந்திவர்மன்

செய்தி : பல்லவ மன்னன் தெள்ளாறு எறிந்த நந்திவர்மனின் 12 வது ஆட்சியாண்டில் நயதீர பல்லவராயனின் மனைவியாகிய மாரத்தியார் ஆனாங்கூர் இறைவனுக்கு விளக்கெரிக்க 24 கழஞ்சு தானமாக அளித்தாள். அதன் மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டு தினமும் உழக்கு நெய் அளித்து, கோமாசியர் மகன் திருவடி நாராயண பூதியும் சுத்தவாரய வடுகன் மகன் பீமனும் விளக்கெரிப்பாராயினர்.

1 ஸ்ரீ தெள்ளாற் றெறிந்த நந்தி போத்த
2 ரையர்க்கு யாண்டு பந்நிரண்டாவது நய
3 தீரப் பல்லவரையர் தேவியார் மாரத்தி
4 யார் ஆனாங்கூர் மஹா தேவர்க்கு நந்
5 தா விளக்கெரிப்பதற்குக் குடுத்த பொ
6 ன் இருபத்து நாற் கழஞ்சு இ
7 தன் பலிசையால் நாள் வாய்
8 உரிய நெய் அட்டிப்பதற்கு அ
9 மைந்தோம் கரகச் சோமாசியர் ம
10 கன் திருவடி ஏம்ம நாராயணப் பூதி
11. சந்மனும் சுத்த வாரய வடுகன் மகன்பீம....

* இக் கல்வெட்டை தெரியப்படுத்திய விழுப்புரம் திரு. ராகவன், ஆனாங்கூர் திரு. பூலோகம் உடையார் ஆகியோருக்கும் நன்றி.

பெருமையை நிலை நாட்டுகின்றன. பல்லவர்களுக்குப் பின் சற்றுப் பொலிவிழந்த இவ்வூரை சோழர்கள் காலத்தில் மீண்டும் சிறப்புறச் செய்து கோயிலை புதுப்பித்துக் கட்டி உள்ளனர். ஆனால் பிற்காலத்தில் கோயில் மீண்டும் இடிபட்டுப் போயிற்று. எனினும் தொன்மை வரலாற்றிலும் பல்லவர் கலைப் பாணியிலும் என்றும் அழியா இடத்தை ஆனாங்கூர் பிடித்து விட்டது என்றே கூறலாம் கீழ்காணும் கல்வெட்டு இக்கட்டுரையுடன் தொடர்புடையதாகும்.

இடம் : ஆனாங்கூர் கரும்படி வாய்க்கால

காலம் : நந்திவர்மன்

செய்தி : பல்லவ மன்னன் தெள்ளாறு எறிந்த நந்திவர்மனின் 12 வது ஆட்சியாண்டில் நயதீர பல்லவராயனின் மனைவியாகிய மாரத்தியார் ஆனாங்கூர் இறைவனுக்கு விளக்கெரிக்க 24 கழஞ்சு தானமாக அளித்தாள். அதன் மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டு தினமும் உழக்கு நெய் அளித்து, கோமாசியர் மகன் திருவடி நாராயண பூதியும் சுத்தவாரய வடுகன் மகன் பீமனும் விளக்கெரிப்பாராயினர்.

*1* *ஸ்ரீ தெள்ளாற் றெறிந்த நந்தி போத்த*
*2* *ரையர்க்கு யாண்டு பந்திரண்டாவது நய*
*3* *தீரப் பல்லவரையர் தேவியார் மாரத்தி*
*4* *யார் ஆனாங்கூர் மஹா தேவர்க்கு நந்*
*5* *தா விளக்கெரிப்பதற்குக் குடுத்த பொ*
*6* *ன் இருபத்து நாற் கழஞ்சு இ*
*7* *தன் பலிசையால் நாள் வாய்*
*8* *உரிய நெய் அட்டிப்பதற்கு அ*
*9* *மைந்தோம் கரகச் சோமாசியர் ம*
*10* *கன் திருவடி ஏம்ம நாராயணப் பூதி*
*11.* *சந்மனும் சுத்த வாரய வடுகன் மகன்பீம....*

* இக் கல்வெட்டை தெரியப்படுத்திய விழுப்புரம் திரு. ராகவன், ஆனாங்கூர் திரு. பூலோகம் உடையார் ஆகியோருக்கும் நன்றி.



# 13. அரியலூரில் பல்லவர்காலத் திருமகள் சிற்பம்

இல. தியாகராசன், அரியலூர்

திருச்சி மாவட்டம் அரியலூரில் உள்ள கோதண்டராமசுவாமி கோயிலில் மிகவும் பழமை வாய்ந்த பல்லவர் காலத்துத் திருமகள் சிற்பம் ஒன்று உள்ளது. இச்சிற்பம் தசாவதார மண்டபத்தில் வடக்குப் பக்கத்தில் உள்ளது. 11 அங்குல உயரமும் 5 அங்குல அகலமும் கொண்ட இச்சிற்பம் மிகவும் நுண்ணிய வேலைப்பாடு கொண்டதாக உள்ளது (படம் 2). அழகிய தாமரை மலர் மேல் உட்கார்ந்த நிலையில் திருமகள் உருவம் செதுக்கப் பட்டுள்ளது. தலையில் கரண்ட மகுடமும், கழுத்தில் தாலி, பதக்கமும், காது, கை, மார்பில் அணிமணிகளும் உள்ளன. தலைக்கு மேல் குடையும் உள்ளது. தாமரைப் பீடத்தில் இருபுறமும் சங்குசக்கரம் உள்ளது. இருபக்கத்திலும் இரு பெண்கள் நிற்கின்றனர். தோளின் இருபுறத்திலும் இரண்டு யானைகள் நின்றுகொண்டு தம் துதிக்கைகளால் நீரைப் பொற்குடங்கொண்டு திருமகளின் மேல் பொழிகின்றன.

திருமகளின் கை கால்கள் பந்துபோன்ற வடிவில் உருண்டையாகச் செதுக்கப்பட்டுள்ளன. இலட்சுமிதேவி அலை மகள் என்பதைக் காட்ட கை கால்கள் உயரே எழும்பி சுருண்டு விழும் அலை வடிவில் காட்டப்பட்டுள்ளன.

இலக்குமியைத் தன் மார்பில் தரித்தவனாதலால் திருமாலுக்கு திருமறுமார்பன் என்று பெயர். எனவே இவ்வுருவம் திருமறு என்றும் ஸ்ரீவத்ஸம் என்றும் அழைக்கப்படுகின்றது. இதுபோன்று தஞ்சைமாவட்டம் ஏனாதியில் செம்பால் வார்க்கப் பட்ட சிலை கிடைத்துள்ளது. கற்சிற்பமாக வடார்க்காடு மாவட்டம் காவேரிப்பாக்கம், செங்கைமாவட்டம் மணிமங்கலம், கூரம் ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன.

பல்லவர் காலத்தைச் சேர்ந்த இச்சிற்பம் கி.பி. 6-7 ஆம் நூற்றாண்டில் செதுக்கப்பட்டுள்ளது. அரியலூர் பெருமாள் கோயிலில் இச்சிற்பம் இருப்பதால் இவ்வூரும் கோயிலும் பல்லவர் காலத்திலேயே சிறப்புடன் விளங்கியது தெரிகிறது. மேலும் இக்கோயிலில் பல்லவர் கலைப்பாணியில் அமைந்த சிங்கமுகத் தூண்களும் உள்ளன. எனவே இங்கு பல்லவர் காலத்துக் கோயில் இருந்தது என அறியலாம். ஆனால் பழைய கோயிலின் கலைக் கூறுகள் பிற்காலத் திருப்பணியினால் மறைந்துபோய் அவற்றின் எச்சங்களாக இச்சிற்பமும் தூண்களும் மட்டுமே உள்ளன. இவை அரியலூர் 1300 ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றுப் பழமையும் சிறப்பும் உடையதாக இருப்பதை நமக்குக் காட்டும் சான்றுகளாம்.

இப்போதுள்ள கோயில் கி.பி.1635ல் அரியலூர் பாளையக்கார மன்னர் அரசு நிலையிட்ட கிருஷ்ணப்ப மழவராயர் காலத்தில் கட்டப்பட்டதாகும். இம்மழவராயரின் சிற்பமும் இவரின் மனைவி எறம்மாளின் சிற்பமும் தசாவதார மண்டபத்தூணில் உள்ளது. தமிழகத்தில் வேறு எந்தக் கோயிலிலும் காணமுடியாத ஆறுஅடி உயரமுடைய தசாவதார சிற்பங்கள் இக்கோயிலில்தான் உள்ளன.



# 14. சிற்பங்களில் காபாலிகர் உருவம்

த.சந்திரகுமார், தஞ்சாவூர்

சிவனை வழிபடும் சைவர்களில் காபாலிகர் எனும் பிரிவினர் தீவிர சிவ வழிபாட்டாளர்கள். அவர்கள் உடலெங்கும் சாம்பலைப் பூசி, கபால மாலை தரித்து பயங்கரத் தோற்றமாகத் தங்களைச் சித்தரித்துக்கொண்டு பிணங்கள் தீயிடப்படும் சுடுகாட்டினையே கோயிலாகக் கருதி வாழ்ந்து, சிவனின் கோர வடிவினை (பைரவரை) வழிபடுவார்கள். தமிழ் இலக்கியங்கள் இவர்களை மேற்கூறிய காரணங்களால் 'சுடலை நோன்பிகள்' எனக் கூறுகின்றன. பிற பிரிவினர்களால் ஒதுக்கப்படும் மது, மாது, அசைவம் போன்றவைகள் இவர்களுக்குப் பிடித்தமானவை. இத்துடன் மட்டுமன்றி மந்திரம், மாயம் போன்ற தாந்தரிகக் கோட்பாட்டில் ஈடுபாடு கொண்ட இவர்கள், பெண்களுடன் கொண்ட அதிகப்படியான ஈடுபாட்டால் வாமச்சாரிகள் என்றும் அழைக்கப்படுவது உண்டு. தங்களின் கபால மாலையினை முப்பிரி பூநூலோடு சமன்படுத்தும் இவர்கள் தங்களின் மதுச் சாலைகளை யாகசாலையாகக் கருதுகின்றனர். இவர்களின் வேள்விக் குண்டங்களில் உயிர்களின் குருதியே நெய்யாகிறது. இவர்களின் முரண்பாடான செயல்பாடுகளை மத்தவிலாசப் பிரகசனம் உட்படப் பல இலக்கியங்களில் தரவுகள் காணக்கூடியதாக உள்ளன.

இலக்கியங்களில் இவர்களைப் பற்றிய செய்திகள் பல காணப்பட்டாலும் கலைப்படைப்புகளில் இவர்களின் 'படிமங்கள் மிக அரிய ஒன்றாகும். இத்தகைய சிறப்புடைய அரிய புடைப்புச் சிற்பம் (2.5X1.3 அடி) ஒன்று வடார்க்காடு மாவட்டம் போளூருக்கு அருகில் சந்தவாசல் எனும் கிராமத்தில் பாழடைந்த சிவன் கோயிலில் அமைந்துள்ளது. இக்கோயிலின் கருவறையில் உள்ள சிவலிங்கத்திற்கு நேராகப் பிற இடங்களில் நந்தி அமைந் திருப்பதுபோல், இக் காபாலிகர் படிமம் மிகச் சிறிய இடத்தில் சந்நதிக்குள் அமைக்கப்பட்டுள்ளது. பக்தர்கள் சிவனடியார்களை வழிபடுவது போன்று இதனையும் சிவனடியாராகவே கருதி

இன்றைக்கும் இங்கு வழிபடுகின்றனர். மேலே குறிப்பிட்ட விளக்கங்களுக்கு ஆய்வுக்குட்பட்ட இப்படிமத்தின் அமைதி பொருத்தமுடையதாக அமைந்துள்ளது.

தலையில் சிவலிங்கத்தைத் தாங்கி ஓடும் நிலையில் அமைந்துள்ள இப் படிமத்தின் காதில் குண்டலமும், முகத்தில் மீசையும் காணப்படுகிறது. வலது கை ஓர் அகண்ட கத்தியையும், இடது கை முயலையும் (வெட்டப்படுவதற்காக) தாங்கி உள்ளது. கழுத்தில் கபால மாலையும், வீரத்தின் அடையாளமாக சன்ன வீரமும் காணப்படுகிறது இடுப்பில் நீண்ட அரிவாள் அமைக்கப் பட்டுள்ளது. அரை நிர்வாண நிலையில் உள்ள இதன் இடுப்பில் மிக மெல்லிய ஆடை காணப்பட்டாலும் இதன் ஆண்குறி வெளியில் தோற்றமளிப்பதுபோல் உள்ளது. தலைக்குப் பின்புறம் நீண்ட சடைப் பின்னல்கள் செதுக்கப்பட்டுள்ளது. முழு அமைப் பினையும், வடிவமைக்கப்பட்ட பாங்கினையும் கூர்ந்து நோக்கும் போது இது 15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த படிமம் போல் வடிவமைக்கப்பட்டுள்ளது என்று கருதலாம்.



காபாலிகர்களிடையே வைதீகம், மற்றும் வைதீகம் சாராத பிரிவினர் என இரு பிரிவினர் உள்ளனர். இதில் வைதீகம் சார்ந்த பிரிவினர் உயிர்ப்பலி போன்ற செயல்பாடுகளை பாவமாகக் கருதி புறந் தள்ளியவர்கள். வேதம் சாராத பிரிவினர் இக் கட்டுரையில் முன்பு கூறப்பட்ட மாது, மாமிசம் போன்ற அனைத்து செயல்பாடுகளும் உள்ளடக்கிய பக்தி நெறியினர். இப்படிமத்தின் வடி வமைப்பு வைதீகம் சாராத வகையைச் சார்ந்த ஒன்று என்று கருதலாம். இவர்கள் உயிர்ப் பலியினைத் தருவதால் இவர்களை லிங்காயத் துகள் அல்லது வீர சைவர்கள் என்றும் ஏற்க முடியாது.



# 15 அளற்றுநாட்டுக் குளத்தூர்

வெ. வேதாசலம், மதுரை

பாண்டிநாட்டின் பண்டைய உள்நாட்டுப் பிரிவுகளுள் ஒன்றான அளற்றுநாடு என்ற நாட்டுப்பகுதி காமராசர் மாவட்டத்தில் அருப்புக்கோட்டை வட்டத்தின் தென்கிழக்குப் பகுதியையும், பசும்பொன்தேவர் திருமகனார் மாவட்டத்துக் கமுதி வட்டத்தில் ஒருபகுதியையும் சார்ந்த ஊர்ப்பகுதிகளைக் கொண்டதாகும்.

இவ்வளற்றுநாட்டில் இருந்த ஊர்களாக கலிசல்மங்கலம்[1], பாலைக்குறிச்சி[2], அள்ளம்[3], பல்லெறிச்சில் என்ற சில ஊர்கள் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றன. இவற்றில் குளத்தூரும் ஒன்றாகும்[4]. இவ்வூர் இன்று அருப்புக்கோட்டையிலிருந்து பெருநாழி செல்லும் வழியில் பரளச்சி என்ற ஊருக்கு அண்மையில் அமைந்துள்ளது. ஆனால் இன்று தொப்பலாக்கரை என்ற பெயரில் விளங்குகின்றது. இவ்வூர் முதல் இராசராசனின் காலத்தில் அவனது 'சனநாதன்' என்ற பட்டப்பெயரால் 'சனநாத நல்லூர்' என்றும் அழைக்கப்பட்டிருக்கின்றது[5]. இப்பெயர் தொப்பலாக்கரையிலுள்ள சிதைந்துபோன எம்மண்டலமும் கொண்டருளிய மாறவர்மன் குலசேகரபாண்டியனின் கல் வெட்டிலும், 'குளத்தூரான சென (நாத)' நல்லூர்' என்று குறிப்பிடப்படுகின்றது.

## குளத்தூர்ப் பல்லவரையர்கள்

இவ்வூரில் பல்லவர்குலத்தில் தோன்றிய பல்லவரையர் எனப்பெற்ற பட்டப்பெயரைப் புனைந்துகொண்ட பாண்டிய

1. SII., XIV No. 46
2. ARE., 486 of 1922; ARE 260 of 1950-61.
3. இவ்வூர் இன்று திருமாலுகந்தான் கோட்டை என்ற பெயரில் விளங்குகின்றது. கல்வெட்டுக் குறிப்பு நேரில் படிக்கப்பெற்றது.
4. SII., XIV No. 61; ARE., 338 of 1961-62.
5. EI., III/E, EC., X

அரசியல் அதிகாரிகள் வாழ்ந்திருக்கின்றார்கள். இப்பல்ல வரையர்கள் முற்காலப்பாண்டியப் பேரரசின் முடிவில் பல்லவர்கள் வலியிழந்த காலத்திலிருந்து அவர்களை வலியிழக்கக் காரணமாயிருந்த சோழர்களுக்கு எதிரான நிலையில் பாண்டிய நாட்டிற்கு வந்து குடியேறிப் பாண்டியர்களது அதிகாரிகளாகப் பணிபுரிந்திருக்கின்றார்கள். இவர்கள் வழிவந்த பின்வரும் பல்லவரையர் இருவர் முற்காலப்பாண்டியப்பேரரசு காலத்தில் இக்குளத்தூரில் வாழ்ந்திருக்கின்றனர்.

1. விக்கிரமகாமுக பல்லவரையனான தேவஞ்சோலை

2. மூர்க்கவிச்சாதிரப் பல்லவரையனான சாத்தன் தமிழன்.

பாண்டியநாட்டு அரசியல் அதிகாரிகளாகப் பணியாற்றிய இவர்கள் பல கோயில்களுக்கு அறக்கொடைகளை அளித்திருக் கின்றனர். திருச்செந்தூர் வட்டத்திலுள்ள ஆத்தூர் சோமநா தேசுவரர் கோயிலின் வடபுறம் கோயிலையொட்டிய நிலையில் பெருமாள் சன்னதி ஒன்று உள்ளது. இக்கோயில் பெருமாளுக்கு விக்கிரமகாமுக பல்லவரையன் சடங்கவிகுறிச்சி சபையாரிட மிருந்து நிலங்களை விலைக்கு வாங்கி அளித்திருக்கின்றான்[6]. மூர்க்கவிச்சாதிரப் பல்லவரையன் என்ற மற்றொரு பல்லவரையன் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் ஆட்சிக் காலத்தில் கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்தவன் ஆவான்.

குளத்தூரின் பிறசிறப்புகள்

இவ்வூரில் சோழர் காலத்துக் கல்வெட்டு ஒன்றும் பிற்காலப்பாண்டியர் கல்வெட்டு ஐந்துமாக மொததம் ஆறு கல்வெட்டுகள் உள்ளன. இவை இது வரை படியெடுக்கப் பெறாத புதியதாகக் கண்டறியப்பெற்ற கல்வெட்டுகளாகும். இக்கல்வெட்டு களையும் இவ்வூரில் காணப்படும் கட்டடம் சிற்பங்களைக் கொண்டும் இக்குளத்தூரில் பாண்டியர் காலத்தினைச் சார்ந்த பெருமாள் கோவில் ஒன்றும் சிவன்கோயில் ஒன்றும் துர்க்கை கோயில் ஒன்றும் சமணப்பள்ளி ஒன்றும் சிறப்புடன் விளங்கியதை அறியமுடிகின்றது.

6. SII. XIV No. 61.





இவ்வூரின் மேல்திசையிலுள்ள பெருமாள் கோவில் இன்று சிறிய கருவறை அர்த்தமண்டபத்துடன் காட்சியளிக்கிறது. வடபுற அதிட்டானத்தில் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1216-1238) கல்வெட்டு ஒன்றும் மேல்புற அதிட்டானத்தில் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி. 1253-1296) கல்வெட்டு ஒன்றும் தென்புற அதிட்டானத்தில் எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரரின் (கி.பி. 1268-1311) கல்வெட்டு ஒன்றும் முதல்மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு ஒன்றும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் முன்பாகவுள்ள பலி பீடத்தில் குலசேகரபாண்டியனின் கல்வெட்டு ஒன்றும் கல்லால் ஆன சிங்க்வாகனத்தில் சோழர்காலக் கல்வெட்டு ஒன்றும் பொறிக்கப்பட்டுள்ளன.

இப்பெருமாள் கோயிலின் அதிட்டானத்திலுள்ள கல்வெட்டுகளைக் கொண்டு இக்கோயில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் எடுத்துக் கட்டப்பெற்றுக் காலப்போக்கில் சிதைந்திருக்க வேண்டும் எனக் கூறலாம். இக்கல்வெட்டுக்களில் இக்கோயில் அளற்றுநாட்டுக் குளத்தூர் 'உய்யவந்த விண்ணகரம்', 'திருமேற்கோயில்' என்று குறிப்பிடப்படுகின்றது 'உய்யவந்தான்' என்ற பெயர் முதல் இராசராச சோழனுக்குரிய பட்டப்பெயராகும். எனவே இப்பெயரினைக் கொண்டு இக்கோயில் முதல் இராசராசன் காலத்திலேயே சிறப்புற்று விளங்கிய கோயிலாக விளங்கியிருக்க வேண்டும் எனக் கருதலாம்.

இக்கோயிலிலுள்ள மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டுகள் இக்கோயில் பெருமாளுக்குத் திருவமுதிற்காக நிலங்கள் தானமாக விடப்பெற்றதைத் தெரிவிக்கின்றன. இக்கோயிலின் தென்புறமுள்ள கல்வெட்டு இவ்வூரில் இருந்த குளத்தின் நடுவிலுள்ள மடையால் நீர்பாய்ந்து நெல்விளையும் நிலம் மூன்று மாவும், இவ்வூரின் மேற்கானப் பகுதியிலிருந்த இராசேந்திரசோழ வாணவதரையன் விலைகொண்டு அவன்

வழியினரால் அனுபவிக்கப்பெற்று வந்த சமபொதிநிலம் இருபத்துநான்கு மாவும், கிழவனேரி நிலம் எட்டுமாவும், நீர் நிலம் மூன்று மாவுமாக உள்ள அனைத்து நிலங்களும் ஊர் அவையார் மூலம் இப்பெருமாளுக்கு விலைப்பிரமாணம் செய்து அளிக்கப் பட்டதைத் தெரிவிக்கின்றன. இதேபோன்று மாறவர்மன் குலசேகர பாண்டியனது காலத்திலும் இக்கோயிலுக்கு இவ்வூர்ச் சபையார் பல்லெறிச்சிலான பல்லவகுலாந்தகநல்லூர் பகுதியில் இருந்த நிலங்களைத் திருவிடையாட்டமாக அளித்துள்ளனர். மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் கல்வெட்டு இக்கோயிலில் நாள்தோறும் ஏழரை நாழிகைக்குக் குறையாமல் திருவிளக்கு எரிப்பதற்காக இக்கோயிலில் பணிபுரிந்த நம்பிமார் குளத்தூர் நின்றவாதிபிரான் அழகப்பெருமாள் என்பவனிடமிருந்து காசுகள் பெற்றுக் கொண்டதைப் பற்றித் தெரிவிக்கின்றது. இம்மாறவர்மன் விக்கிர பாண்டியன் கல்வெட்டு இக்கோயிலில் இவ்வரசனது காலத்தில் இளையாழ்வான் சீராளத்தேவனான திருமாலிருஞ் சோலைப்பட்டன், அருளாளபெருமாளான அணிஅரங்கப் பட்டன் என்பவர்கள் பூசைசெய்யும் நம்பிமார்களாகப் பணி புரிந்ததைத் தெரிவிக்கின்றது.

முதல்மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு அவனது காலத்தில் அரசியல் அதிகாரிகளாகப் பணிபுரிந்த அரயன் பெற்றான் தென்னவன் விழுப்பரையன், விக்கிரமாபாண்டிய வயனாட்டரையன், சூரியநக்கபிரான், அநிருத்தவன் விழுப் பரையன், அரையன் தமிழன் ஆகியோர் பற்றிக் குறிப்பிடுகின்றது. மேலும் இவ்வூரிலிருந்த நீர்நிலம், சமபொதிநிலம், கருஞ்செய் என்று பல்வகையாய் இருந்த நிலங்கள் புரவுக்கோல் என்ற கோலால் அளக்கப்பட்டிருப்பதையும் இவற்றில் சில நிலங்கள் இவ்வூர்க் குளத்தின் மடையால் நீர்பாய்ந்து நெல்விளைந்ததையும் தெரிவிக்கின்றது.

## கல்வெட்டுப் பொறித்த பலிபீடம்

இக்கோயிலுக்குரிய பலபீடத்தைக் குலசேகர பாண்டியன் காலத்தில் பல்லெறிச்சிலைச் சார்ந்த இரட்டை மூவானான



தமிழதரையன் என்பவன் செய்வித்திருக்கின்றான். இப்பலி பீடத்திலேயே இச்செய்தி பின்வருமாறு கல்வெட்டாகப் பொறித்து வைக்கப்பட்டுள்ளது.

1 குலசேகரதேவற்கு யா

2 ண்டு 3வது இப்பெலிபீ

3 டஞ் செய்வித்தான் பல்லெறிசி

4 ல் இரட்டைமூவானான தமிழத

5 ரையன் தன்மம்

இக்கல்வெட்டு எம்மண்டலமும் கொண்டருளிய மாறவர்மன் குலசேகரபாண்டியனுக் குரியதாக இருக்கலாம். இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் தமிழதரையன் என்பவன் முதல்மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டில் குறிப்பிடப் பெறும் அரையன் தமிழன் என்பவனது மகனாக இருக்கலாம். இவன் தனது தந்தையின் பெயரான தமிழன் என்ற பெயரைத் தன்பெயரின் முற்பகுதியில் சேர்த்து தமிழதரையன் என்று தன்னை அழைத்துக் கொண்டிருக்கின்றான்.

## சிவன் கோயில்

இவ்வளற்றுநாட்டுக் குளத்தூரில் சிறப்புடன் விளங்கிய பெருமாள் கோவிலைப் போன்றே சிவன்கோயிலும் துர்க்கை கோயிலும் சமணப்பள்ளியும் சிறப்புடன் இருந்திருக்கின்றன. ஆனால் இவை காலவெள்ளத்தால் அழிந்தும் சில வேறுவடிவில் மாறியும் எஞ்சி நிற்கின்றன.இவ்வூர் ஊரணிக்கரையில் சிவன் கோயில் ஒன்று இருந்தமைக்கான தடயங்கள் காணப்படுகின்றன. இப்பகுதியில் சிவலிங்கம் ஒன்றும் ஏராளமான கோயில்கட்டடக் கற்களும் இடிந்த நிலையில் சிதறிக்கிடக்கின்றன.

## துர்க்கைகோயில் சிங்கவாகனம்

இவ்வூரில் துர்க்கைக்கென்று எடுக்கப்பெற்ற கோயில் ஒன்று இருந்ததைத் தற்போது பெருமாள்கோவிலின் முன்பு எடுத்து வைக்கப்பெற்றிருக்கும் சிங்கத்தின் சிற்பமும் அதில் பொறிக்கப்

பட்டுள்ள வெண்பாவில் அமைந்த பாடல் கல்வெட்டும் உணர்த்துகின்றன. இச்சிங்கத்தின் சிற்பத்தை சோழபிரானின் இருபத்தெட்டாவது ஆட்சியாண்டில் வீரன்சடைக்கனான தர்மவித்தகன் என்பவன் குளத்தூரிலிருந்த துர்க்கையின் வாகனமாகச் செய்துவித்ததை அதில் பொறிக்கப் பட்டுள்ள இப்பாடல் கல்வெட்டு தெரிவிக்கின்றது. இக்கல் வெட்டில் குறிப்பிடப்பெறும் சோழவரசனை அதன் எழுத்தமைதி யையும் குறிப்பிடப்பெற்றிருக்கும் ஆட்சியாண்டையும் கொண்டு முதற் குலோத்துங்கன் காலத்தினைச் சார்ந்ததாகக் கொள்ளலாம். தற்போது இவ்வூரில் இத்துர்க்கை கோயில் காளியம்மன் கோயிலாக மாறிய நிலையில் உள்ளது. இதனை அண்மைக் காலத்தில் புதுப்பிக்கும்போது , இவ்வூரார் இச்சிற்பத்தைப் பெருமாள் கோயிலுக்கு அருகில் கொண்டுவந்து வைத்திருக்க வேண்டும்.

விற்பொறிவீரப்பெரும்பள்ளி

குளத்தூர் பெருமாள்கோயிலுள்ள எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரபாண்டியனின் இருபதாவது ஆட்சி யாண்டுக் கல்வெட்டு சமணப்பள்ளி ஒன்று இவ்வூரில் சிறப்புடன் இருந்ததைப்பற்றித் தெரிவிக்கின்றது. இப்பள்ளி 'விற்பொறி வீரப்பெரும்பள்ளி' என்ற பெயரில் அழைக்கப்பட்டிருக்கின்றது. இப்பள்ளிக்காக பள்ளிச்சந்தமாக இவ்வூரார் பல்லெறிச்சில் பகுதியில் நிலங்களை அளந்து அதனைக் கல்லில் பொறித் திருக்கின்றனர். இப்பள்ளி தற்போது இவ்வூரில் இல்லாமல் அழிந்துபட்டாலும் அதற்குரிய சான்றாக இவ்வூரின் ஊரணிக் கரையில் இரண்டு சமணத் தீர்த்தங்கரர் சிற்பங்கள் காணப் படுகின்றன.

விற்பொறிவீரப்பெரும்பள்ளி என்ற இச்சமணப் பள்ளியின் பெயர் பல அரிய வரலாற்றுண்மைகளை உணர்த்து கின்றது. விற்பொறிவீரர் என்ற வீரரால் இப்பள்ளி தோற்றுவிக்கப் பெற்றமையால் இப்பெயரை இப்பள்ளி பெற்றிருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட நாடு என்றில்லாமல் எல்லா நாடுகளுக்கும்



சென்று வணிகம் நடத்திய வணிகர்குழுக்கள் தங்கள் கொண்டு செல்லும் பொருட்களை வழிப்பறியில் இழக்காமல் இருப்பதற்கு அவர்களுக்குத் துணையாக வில்லும்வாளும் ஏந்திய படை வீரர்களைத் தங்களுடன் அழைத்துச் சென்றுள்ளனர். மேலும் பலவூர்களில் பாதுகாப்பான நிலையில் தங்குவதற்கும் பொருட் களை சேமித்து வைப்பதற்கும் தளங்களை அமைத்து அவற்றிற்குப் பாதுகாப்பாக வீரர்களை நிறுத்திவைத்திருக்கின்றனர்[7].

குளத்தூரில் காணப்படும் கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் 'விற்பொறிவீரர்' வணிகர்குழுக்களோடு தொடர்புடைய வீரர் களாகவே இருக்கவேண்டும். இவர்கள் அளற்றுநாட்டுக் குளத்தூரில் தங்கியிருந்தபோது தங்களது பெயரால் 'விற்பொறி வீரப்பெரும்பள்ளி' என்று இச்சமணப்பள்ளியைச் செய்திருக்க வேண்டும். இவ்வூர் பாண்டிய நாட்டுத் தலைநகரிலிருந்து அருப்புக் கோட்டை வழியாக மாரியூர் போன்ற கடற்கரைப்பட்டினங் களுக்குச் செல்லும் அக்காலப் பெருவழியில் அமைந்திருந்தமை யால் இப்பெருவழியில் அடிக்கடி பயணம் செல்லும் வணிகர்கள் இவ்வூருக்கு வந்து தங்கியிருக்க அதிக வாய்ப்புள்ளது.

தமிழ்நாட்டில் இடைக்காலத்தில் வாழ்ந்த வணிகரோடு தொடர்புடைய இவ்வீரர்கள் பெரும்பாலும் சைவ, வைணவ மதத்திற்கே பெரும் ஆதரவை அளித்திருப்பதைச் சோழர், பாண்டியர் காலக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இந் நிலையில் கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டுக் குளத்தூரில் தங்கியிருந்த 'விற்பொறிவீரர்கள்' சமணத்திற்கு ஆதரவளித்திருப்பதையும், கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் அவர்கள் தங்கள் பெயரால் செய்வித்த பள்ளியும் சமண சமயமும் சிறப்புடன் விளங்கியதையும் புதியதாகக் கண்டறியப்பெற்ற தொப்பலாக்கரைக் கல்வெட்டுக்களும் அங்குள்ள சமணத்தீர்த்தங்கரர்களின் சிற்பங்களும் உணர்த்துகின்றன.

7. K.A. Nilakanta Sastri, **The Colas**, University of Madras (Reprint) p. 357.